மலர் 15 இதழ் 87

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190; 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 8—12—74 ஞாயிறு

வெளியூர் 9—12—74 திங்கள்



## நகரசபைத் தேர்தல்:

# தி.மு.க.வுடன் இடது கம்யூனிஸ்டு கூட்டு

## பொதுக்குழுவில் கருணாநிதி பேச்சு

மதுரை, டிச. 8—நகரசபைத் தேர்தலில் தி. மு. கழகத்துடன் இடது கம்யூனிஸ்டு கூட்டுச் சேரத் தயாராக இருப்பதாக முதலமைச்சர் கருணாநிதி இன்று தெரிவித்தார்.

இந்தக் கூட்டு ஏற்பட நல்ல சூழ்நிலைகளை உருவாக்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

இந்திரா காங்கிரஸ் ஒரு கேள்விக்குறியாக உள்ளது என்று கூறிய கருணாநிதி, வருகிற நகரசபை தேர்தல், யார் யார் நம்பக்கம்இருக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டும் கண்ணாடியாக இருக்கும் என்றும் கூறினார்.

இந்தத் தேர்தலின் முடிவு, வருகிற 76 தேர்தலில் நாம் யாரைச் சந்திக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தும் என்றும் குறிப்பிட்டார்.

மேற்கண்ட கருத்துக்களை இன்று மதுரையில் 2-ம் நாளாக நடைபெற்ற தி. மு. க. பொதுக்குழுக் கூட்டத்தில் கருணாநிதி தெரிவித்தார்.

மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில் 2வது நாளாக தி. மு. கழகப் பொதுக் குழுக் கூட்டம் இன்று காலை 10-30 மணிக்குக் கூடியது.

இன்றைய கூட்டத்தில் எஸ்.எஸ். ராஜேந்திரன், நன்னிலம் நடராஜன், கோவை. ராமநாதன்விஸவநாதன்எம்.பி., கா.மு. கதிரவன், ஏ.கே. துரைசாமிஆகியோர்பேசினார்கள்.

அதன்பின் அமைச்சர் அன்பழகன் பேசினார்.

கழகத்தின் ஆக்கப் பணிகள் குறித்தும், வளர்ச்சித் திட்டம் பற்றியும் நடைமுறைப் பணிகள்பற்றியும், அன்பழகன் தமது உரையில் குறிப்பிட்டார்.

அதன்பின் முதல்வர் கருணாநிதி நன்றி தெரிவித்துப் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

நகரசபைத் தேர்தலை பிப்ரவரி மாதத்தில் வைத்திருப்பது சரியா என்று பலர் சந்தேகம் எழுப்பினர், இதில் சந்தேகப் படத்தேவையில்லை.

இந்தப்பிரச்னை பற்றி செயற்குழுவில் பேசப்பட்ட அளவுக்குப் பொதுக் குழுவில் யாரும் பேசவில்லை. இந்த நகரசபைத் தேர்தல் மூலம் நமக்கு (தி மு கவுக்கு) பாதகம் ஏற்பட்டுவிடுமோ என்று யாரும் கருதவேண்டாம். அப்படியே பாதகம் ஏற்பட்டால்கூட, அது அடுத்த 76 தேர்தலில் பொதுமக்களுக்கு நம்மீது அனுதாபத்தை ஏற்படுத்த ஒரு வழியாக இருக்கும்.

இந்தத் தேர்தலில் நாம் வெற்றி தோல்வியைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் யார் யார் நம்பக்கம் இருக்கிறார் என்பதை எடுத்துக் காட்டும் கண்ணாடியாக அமையும்.

தற்போது இந்திரா காங்கிரஸ் ஒரு கேள்விக்குறியாக உள்ளது.

காமராஜருடன் இணைவதா? அல்லது அ தி மு கவுடன் சேருவதா என்ற கேள்வியில் அவர்கள் (இ. காங்கிரஸ்) இருக்கிறார்கள். வலது கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி எதுவும் குறிப்பிடத் தேவையில்லை.

### இ. கம்யூனிஸ்டு விருப்பம்

ஆனால் இடதுசாரி கம்யூனிஸ்டு கட்சியைப் பொறுத்தவரை இங்குள்ள பல நம்முடன் கூட்டுச் சேர விருப்பம் தெரிவித்திருக்கிறார்கள்.

இதை நம்முடைய செயலாளர்கள் பலர் என்னிடம் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள்.

தமிழ் நாட்டில் உள்ள இடது கம்யூனிஸ்டு கட்சிச் செயலாளர்களின் இந்த விருப்பத்திற்கு டெல்லியில் உள்ள அக்கட்சியின் மேல் மட்டத்திலும் ஆதரவு இருப்பதாகத் தெரிகிறது.

6-ம் பத்தி பார்க்க

(5-ம் பத்தி தொடர்ச்சி)

ஆகவே இடதுசாரி கம்யூனிஸ்டு கட்சியுடன் கூட்டுச் சேரும் சூழ்நிலையை நாமும் உருவாக்கத் துணை நிற்க வேண்டும். இந்தத் தேர்தல் நம்பக்கம் யார் யார் இருக்கிறார்கள் என்பதைத் தெளிவு படுத்திவிடும்.

எனவே அதன் மூலம் வருகிற 76 தேர்தலில் நாம்யாரை சந்திக்கவேண்டும் என்பதும் தெளிவாகிவிடும்.

நாம் கோட்டையிலே இருந்தாலும், நமக்குக் கழகம் எனும் கோட்டைதான் முக்கியம்.

சிலர் அந்தக் கோட்டையைப் பிடிக்கும் ஆசையில் கட்சிக் கோட்டையை விட்டுவிடப் பார்க்கிறார்கள். நமது கழகமும், நாமும் அப்படி அல்ல.

இவ்வாறு கருணாநிதி பேசினார்.

இன்று பிற்பகலுடன் பொதுக்குழுக் கூட்டம் முடிந்தது.

அதன்பின் இன்று மாலை பிரமாண்ட ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெறுகிறது.

## தமிழ்நாடு வாங்கும் புதிய கப்பலை

# அமைச்சர் பார்த்தார்

டோக்கியோ, டிச. 8—தமிழ்நாடு அரசு வாங்கவிருக்கும் புதிய கப்பலை போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் ஜப்பானில் பார்வையிட்டார்.

தமிழக அரசு தொடங்கியுள்ள "பூம்புகார் கப்பல் போக்குவரத்து வாரியம்" வெளிநாட்டிலிருந்து 2 கப்பல்கள் வாங்குகிறது. முதல் கப்பலை ஜப்பான் நாட்டில் இருந்து வாங்கிவர அமைச்சர் ராமச்சந்திரன் ஜப்பான் சென்றிருக்கிறார்.

டோக்கியோ போய் சேர்ந்த அவர், அங்கிருந்து மிச்சுசிமா என்னும் கப்பல் கட்டும் தளத்திற்கு சென்றார்.

தமிழக அரசு வாங்கும் கப்பலை அவர் பார்வையிட்டார். கப்பல் கம்பெனியை சேர்ந்த அதிகாரிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்.

தமிழக அரசு வாங்க இருக்கும் கப்பல், 7,750டன் எடையுள்ளது. அதன் விலை ஏறத்தாழ ரூ. 1 கோடியாகும்.

ஜப்பானிலிருந்து வாங்கி வரப்படும்கப்பலுக்கு 'அண்ணா' என்று பெயர் சூட்டப்படும். இந்தக் கப்பல் அடுத்தமாதம் (ஜனவரி) சென்னைக்கு வந்து சேரும்.

அமைச்சர் ராமச்சந்திரன் மொத்தம் 10 நாட்கள் ஜப்பானில் தங்கியிருந்து கப்பல் வாங்குவதை முடிவு செய்வார்.

## பீகாரில்

# மக்கள் கட்சியுடன் சோஷலிஸ்டு கட்சி இணைந்தது

பாட்னா, டிச. 8—சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சியின் பீகார் மாநிலக் கிளையானது நேற்று மக்கள் கட்சியுடன் இணைந்து விட்டது.

பாட்னா நகரில் நடந்த பீகார் சம்யுக்த சோஷலிஸ்டு கட்சி ஊழியர்கள் மாநாட்டில் இதுசம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

கர்ப்பூரி தாகூர், பனர்சி பிரசாத் குப்தா ஆகியோர் கூட்டாக தலைமை வகித்தனர்.

மக்கள் கட்சியின் புதிய பீகார் கமிட்டியை நிறுவ தக்க நடவடிக்கை எடுக்கும்படி இந்திய மக்கள் கட்சித் தலைவரைக் கோரி ஒரு தீர்மானம் நிறைவேறியது.

சம்யுக்த சோஷலிஸ்டு கட்சி நிர்வாகக் குழுவின் கட்டளைப்படி எம். எல். ஏ. பதவியை ராஜிநாமாசெய்யாதசம்யுக்த சோஷலிஸ்டு உறுப்பினர்களை மக்கள் கட்சியில் சேர்க்கக் கூடாது என்று தெரிவித்து வேறொரு தீர்மானம் நிறைவேறியது.

# புதுவை கவர்னர் டெல்லி செல்கிறார்

பாண்டிச்சேரி, டிச. 8-பாண்டிச்சேரி கவர்னர் சேத்திலால் இன்று பாண்டிசேரியைவிட்டு காரில் சென்னைக்கு சென்று அங்கிருந்து விமானமூலம் டெல்லிக்குப் போகிறார். 11ந் தேதி அவர் பாண்டிச்சேரிக்குத் திரும்புகிறார்.

டெல்லியில் மத்திய உள்துறை மந்திரியுடன் அவர் முக்கிய பேச்சு நடத்துவார்.

# சவானுடன் மலாசியா மன்னர் பேச்சு

புதுடெல்லி, டிச. 8—டெல்லிக்கு வந்துள்ள மலாசிய தேச பேரரசர் நேற்று இந்தியாவின் வெளிநாட்டு இலாகா மந்திரி சவானைச் சந்தித்துமுக்கியபேச்சுவார்த்தை நடத்தினார்.

இந்துமாக்கடலில் ராணுவ தளம் அமைக்க அமெரிக்கா முற்பட்டுள்ளது பற்றி இரு தலைவர்களும் விவாதித்தனர்.

நேரு வாழ்ந்த தீன்மூர்த்தி இல்லத்திற்கு மலாசிய பேரரசர் சென்று நேரு மியூசியத்தை பார்வையிட்டார்.

மலாசிய பேரரசருக்கு பிரதமர் இந்திரா காந்தி விருந்து நடத்தினார்

# காதலன் மரணம்: காதலியை மணக்க ஓடோடி வந்தவர்

புதுடெல்லி, டிச. 8— காதலியை மணக்க வெளிநாட்டிலிருந்து ஆசையுடன் ஓடோடி வந்த காதலன் டெல்லியில், கத்தியால் குத்தப்பட்டு மரணம் அடைந்தார்.

இந்தப் பரிதாப சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:—

பிரிட்டனிலிருந்த ஒரு பஞ்சாபி இளைஞன் திருமணம் செய்துகொள்வதற்காக இந்தியாவுக்கு வந்தான்.

அந்த இளைஞனின் பெயர் போரா சிங். அவன் பஞ்சாப் மாநிலத்தில் மோகா என்ற ஊரைச் சேர்ந்தவன். பிரிட்டனில் அவன் வசித்து வந்தான். இந்தியாவுக்கு வந்த அவன் டில்லியில் ஒரு ஹோட்டலில் தங்கியிருந்தான்.நேற்று மாலை அவன் தன்னுடைய காதலியைச் சந்திக்க அவளது வீட்டிற்கு ஒரு டாக்சியில் சென்றான். அவள் வசிக்கும் தெருவில் நான்கு இளைஞர் நின்றுகொண்டிருந்தார்கள். போராசிங்கை அவர்கள் தடுத்தார்கள். வாக்குவாதம் ஏற்பட்டது. பின்னர் போராசிங் காதலி வீட்டிற்குச் சென்று திரும்பினான்.

### போலீஸ் வலைவீச்சு

அப்போது அந்த இளைஞர்கள் அவனை ஒரு கத்தியால் குத்தினார்கள் என்று சொல்லப்படுகிறது. மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டபோது போராசிங் வழியில் மாண்டான். அவனைக் குத்திய ஆசாமிகளை போலீசார் தேடி வருகிறார்கள்.

## குழப்பம் அதிகரித்தால்

# "அன்னியர் சதிக்கு இந்தியா இரையாகும்": இந்திரா எச்சரிக்கை

புதுடெல்லி, டிச. 8— நாட்டில் குழப்பமும், அழிவு சக்திகளும் பெருகும்படி அனுமதித்தால் இந்தியா அன்னியரின் சூழ்ச்சிக்கு இரையாகிவிடும் என்று பிரதமர் இந்திரா காந்தி இன்று எச்சரித்தார்.

வர்க்கப் போராட்டத்தைத் தூண்டிவிடும் முயற்சியை இந்திரா கண்டித்தார்.

டெல்லியில் இளம் தொழில் முயற்சியாளர் மாநாட்டை பிரதமர் இந்திரா துவக்கி வைத்துப் பேசினார்.

அப்போது அவர் மேலும் கூறியதாவது:—

நாட்டில் பல்வேறு வர்க்கத்தினரும் ஒத்துழைத்து முன்னேற வேண்டும் என்பதே இந்திரா காங்கிரசின் கொள்கையாகும். இப்போது இக்கொள்கைக்கு சவால் கிளம்பியுள்ளது. இக்கொள்கையைக் குலைத்துவர்க்கப் போராட்டத்தை உருவாக்கமுயற்சிகள் நடந்து வருகின்றன.



### அன்னியர் சதி

காங்கிரசும், அதன் லட்சியங்களும் பலவீனமடைந்தால் வர்க்கப போராட்டமும், அமைதிக்குலைவும் அதிகரித்து நாம் அன்னியரின் சதிக்கு இரையாகி விடுவோம்.

காங்கிரஸ் கட்சியை பெரிய விவசாயிகள், தொழிலதிபர்கள் கட்சி என்று சிலர் வருணிக்கின்றனர். ஆனால் உண்மையில அது அப்படியல்ல. தேர்தலில் பார்த்தால் இது தெரியவரும். தேர்தலில் பணக்கார மிராசுதார்களும், வசதிமிக்க தொழிலதிபர்களும்தான் காங்கிரசை எதிர்த்துப் போட்டியிடுகின்றனர்.

காங்கிரஸ் கட்சி எல்லா வர்க்கத்தினருக்கு, எல்லா தரப்பினருக்குமான கட்சியாகும்.

நாட்டின் பாமர மக்கள் அளிக்கும் ஆதரவுதான் காங்கிரசின் மூல பலமாகும்.

இவ்வாறு இந்திரா கூறினார்.

## புதுவையில்

# 16-ந் தேதி கம்யூ. கிளர்ச்சி

பாண்டிச்சேரி, டிச. 8—பாண்டிச்சேரியில் விரைவில் நகரசபை தேர்தலும், சட்டசபை தேர்தலையும் நடத்தும்படி கோரி, கம்யூனிஸ்டு கட்சியினர் இந்த மாதம் 16-ந் தேதியன்று தர்ணா போராட்டம் நடத்துவார்கள் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## நவமணி கூறியபடி

# சூப்பர்சீர் பிரமாத வெற்றி

சென்னை, டிச. 8—சென்னை கிண்டியில் நேற்று நடந்த ரேசில் மிராஷி பந்தயத்தில் "சூப்பர்சீர்" எதிர்பாராத வெற்றியடைந்து வின்னுக்கு ரூ. 32 கொடுத்தது.

இந்த ரேசில் 'சூப்பர் சீர்' எதிர் பாராத வெற்றிபெறும் என்று நவமணி டிப்ஸ் அளித்திருந்தது குறிப்பிடத்தக்கது.

நேற்று 5 பந்தயங்களில் நவமணி டிப்ஸ் கொடுத்திருந்த குதிரைகளே முதலாவதாக வந்து வெற்றிபெற்றன.

# எங்களைக் குழப்பாதீர்: அரசியல் கட்சிகளுக்கு மாணவர் எச்சரிக்கை

சென்னை, டிச. 8—மாணவர் பிரச்சினையில் அரசியல் கட்சியினர் தலையிட்டு பிரச்னையைக் குழப்பிவருகிறார்கள் என்று அனைத்துக் கல்லூரி மாணவர் தலைவர்கள் குற்றஞ்சாட்டினர்.

சென்னையில் உள்ள பல கல்லூரிகளையும் சேர்ந்த மாணவர் தலைவர்கள் கூட்டாக இன்று ஒரு அறிக்கை வெளியிட்டனர்.

அனைத்துக் கல்லூரி மணவர் பேரவைத் தலைவர் ஜே. கோகுல்ராம், தியாகராயர் கல்லூரியைச் சேர்நத கேசவராஜ், குருநானக் கல்லூரி ஈ. எஸ். மணி, கந்தசாமி கல்லூரி வெங்கட்ரமணன், வைஷ்ணவ கல்லூரி பாலகுரு, ஜெயின் கல்லூரி லட்சுமிபதி, அம்பேத்கார் கல்லூரி கட்கர், பொன்னேரி அரசினர் கலைக்கல்லூரி ராமதாஸ், ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி சம்பத்கார், நந்தனம் கல்லூரி கண்ணையன், ஜெயின் கல்லூரி முசாக் மற்றும் பல மாணவர் தலைவர்கள் இந்த அறிக்கையில் கையெழுத்திட்டுள்ளனர்.

மாணவர்களின் 10 அம்சக் கோரிக்கைகளை நிறைவேற்றி கல்லூரிகளை உடனடியாக திறககவேண்டும் என்று அவர்கள் கோரியுள்ளனர்.

மாணவர் பிரச்சினையில் அரசியல் கட்சிகள் தலையிட்டு பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குப் பதிலாக குழப்பத்தை ஏற்படுத்தி கல்லூரிகளை மூடி மாணவர்களின் படிப்பைப் பாழடித்து வருகின்றன என்று அவர்கள் குற்றஞ்சாட்டினர்.

இதனால் மாணவர்களின் நியாயமான கோரிக்கைகள் நிறைவேறாமல் போய்விட்டிருக்கின்றன என்றும் அறிக்கையில் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.

மாணவர்கள் தங்களது கோரிக்கைகளுக்காக எந்த வித அரசியல் கலப்பும் இல்லாமல் போராட ஆயத்தமாக வேண்டும் என்றும் அறிக்கையில் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

# பாரதி எக்ஸ்பிரஸ் ரெயில்

பாண்டிச்சேரி, டிச. 8—பாண்டிச்சேரியிலுள்ள ஜவஹர் பூங்காவில் குழந்தைகளுக்காக ஒரு எக்ஸ்பிரஸ் ரெயில் விடப்படுகிறது.

இந்தத் திட்டத்திற்கு சுமார் மூன்றரை லட்சம் ரூபாய் செலவாயிற்று.

இந்த ரெயிலுக்கு "பாரதி எக்ஸ்பிரஸ்" என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. பாண்டிச்சேரி கவர்னர் சேத்திலால் இந்த ரெயிலை இன்று ஆரம்பித்துவைத்தார்.

# தமிழனின் வீரம்

திரு. A. K. விஜயபானு, எம்.ஏ., பி.எல்.

[ஆசிரியர் அவர்கள் 1963-ம் வருடம் வெளியிட்ட ''இலக்கியச் சித்திரங்கள்'' என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.]

இந்தக் கட்டுரையின் முதலாவது பகுதி சென்ற ஞாயிறன்று பிரசுரிக்கப் பட்டது. இரண்டாவது பகுதி கீழே தரப்படுகிறது.

வீரன் ஒருவனைப் பாடுவதற்குப் புலவன் ஒருவன் தேவை. மிகப் பெரியவீரனைப் பாடுவதற்கு மிகப் பெரிய புலவன் ஒருவன் தேவை. வீராதி வீரன் ஒருவனைப் பாடுவதற்குப் புலவர்களுள் மேதையான புலவரேறு ஒருவர் தேவை. பாடலிலே அசாதாரணமான அரும்பெரும் வீரனாகிய ஒரு மன்னனைக் காண்கிறோம். பாடலை இயற்றியவர் அசாதாரணமான அரும்பெரும் புலவர் என்பதையும் எளிதில் உணர்கிறோம். அவரவர் துறையிலே இருவரும் ஒருவருக்கொருவர் நிகரானவர். அதனால்தான் பாடல் அவ்வளவு களை கட்டிச் சோபித்து விளங்குகிறது.

தமிழ்ப்பாட்டு ஒன்று அதிர்ஷ்டவசத்தால், கால வெள்ளத்தில் அழிந்து போகாது நமக்குக் கிட்டியுள்ளது, விளக்கம் எதுவுமே தேவையில்லாத பாட்டு அது. பண்டைக்காலத்திலே வீரம் எந்த அளவுக்குப் போற்றி வளர்க்கப்பட்டு வந்தது என்பதற்கு அப்பாடல் ஒரு கை காட்டி, கவிதையிலும் கலையிலும் மூன்று சிறப்புக்கள் இருக்க வேண்டும் என்று கூறுவர் அறிஞர். ஆத்ம வளர்ச்சி புறவாழ்வு இது சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு உண்மையையோ அறத்தையோ அது கூறவேண்டும். கூறுவதை உள்ளத்தை அள்ளும்விதமாக அழகுபடக் கூறவேண்டும். மூன்றாவதாக நமது மனிதத் தன்மையையும் அறமனப்பான்மையையும் அது வளர்க்கவேண்டும். நல்ல குணநிசயம் ஒன்றை நம் முன்னே தோற்றுவித்துக் செம்மைப்படுத்தல் வேண்டும். கீழ்க்கண்ட பாடலிலே வரலாற்று உண்மை ஒன்றைக் காண்கிறோம். வீர உணர்ச்சி நன்மைப் பற்றி ஈர்க்கின்றது. சொல்லிலும் பொருளிலும்சொல்லொணாத ஓர் எழில் பட்டபகல் போன்று பளிச்சென்று ஒளிர்ந்து நம்மைப் பரவசப் படுத்துகின்றது.

## அரசிகளின் மகிழ்ச்சிக்கு காரணம்

பல நூற்றாண்டுகட்கு முன் தமிழ்நாட்டின் ஒரு பகுதிக்கு மகதம் என்று பெயர். புகழ் பெற்ற அரசர்களின் பரம்பரையே ஒன்று அங்குத் தோன்றி வளர்ந்து நற்புகழை நான்கு திக்கிலும் பரப்பி வெற்றிச் செருக்குடன் ஆட்சி புரிந்து வந்தது. வீரம் என்பது அவர்களின் சீரிய குணப் பண்பு. அரசர்களுக்கு ஈடாக அரசிகள் வீரத்தைப் போற்றி, அமுதோடு தம் மதலைகளுக்கு அதையும் சேர்த்துட்டி வளர்த்து வந்தனர். அரசிகளுக்கு மதலைகள் தோன்றின், நாடெங்கும் கோலாகலமும் வைபவமும். ஆனால் அரசிகள் இன்புற்றுப் பூரிப்பது குழந்தைகளைப் பெற்றுவிட்டதாலல்ல. அக்குழந்தைகளுக்குத் தாம் விரும்பும் ஒரு குறிப்பிட்ட சிறப்பு அழகு இருப்பதால்தான், அது இல்லாவிடில் அவர்களின் முகம் சோர்ந்து விடுகிறது. அத்தகைய அங்கவிசேடம் என்ன என்பதைப் பாடலிலே காணுவோம்.

பேரரசர் தேவிமார்
பெற்ற மதலையர் தம்
மார்பகலம் கண்டு
மகிழ்வரே—போர் புரிய
வல்லான் அகளங்கன்
வாணன் திருநாமம்
எல்லாம் எழுதலாம் என்று.

அக்காலத்தில் ஒரு வழக்கம். ஆடவர்கள் தாங்கள் விரும்பும் வீரர்களின் பெயரைத் தங்கள் மார்பிலே பச்சைக் குத்திக்கொள்வதுண்டு. தங்களின் ஆண்மதலைகளுக்கும் பெற்றோர்கள் அவ்வாறு பெரும் புகழ்படைத்த வீரர்களின் பெயர்களை மார்பிலே பொறிப்பதுண்டு. அரசகுமாரர்களைப் பற்றிக் கேட்கவேண்டுமா? அகன்று விரிந்த தம் மதலைகளின் மார்பைக் கண்டவுடன் அரசிகளுக்கு ஒரே பெருமிதமும் கொண்டாட்டமும். வாணன் என்பவன் அக்குலத்தின் அரசர்களுக்கு மூத்தோன். வீரப் புகழெய்தி வெற்றிகள் பல கண்டு மறைந்தவன். அவனுக்கு வாணன், ஏகம்ப வாணன். மாகதர்கோன்; அகளங்கன், பொன்பரப்பினன், வீரப்பெருமான் என்ற எத்தனை எத்தனையோ பெயர்கள், அத்தனை பெயர்களையும் தங்கள் மதலைகளின் மார்பிலே எழுதவேண்டும் என்று ஆசை. அவ்வாசை நிறைவேறுவதற்கு வேண்டிய மார்பகலத்துடன் மதலைகள் தோன்றிவிட்டதைக் கண்டுதான் அரசிகளுக்குக் குதூகலம். வாணனின் புகழோங்கிய பெயர்கள் தம் வரலாற்றில் மட்டும் இருந்தால் போதாது; தங்கள் மதலைகளின் நினைவில் மட்டும் இருந்தால் போதாது; அவர்களின் மார்பிலும் அவைகள் பொறிக்கப்பட்டு இருந்தால்தான் வீரமும் திறனும் அவர்களிடத்திலே சண்டமாருத வேகத்தில் விளைவுற்று வளரும் என்று அவ்வரசிகள் கருதினார்கள். மேலும் தாங்கள்மட்டும் வீரர்களல்ல, தங்கள் பரம்பரையே வீரப் பரம்பரை என்று அம்மதலைகள் எதிர்காலத்தில் சொல்லியும் சிந்தித்தும் இன்புறுவதற்கு அதுவும் ஒரு வாய்ப்பை அளிக்கு மல்லவா? தமிழ் நாட்டிலே எத்தனை வீரர்கள் தோன்றி மறைந்திருக்கிறார்கள் என்பதை நினைக்கும் பொழுதே உடம்பு புல்லரிக்கிறது. ஒரு பிரதேசத்திலே இரும்பும் பொன்னும் விளைவது நமக்குப்பெரிதாகத் தோன்றலாம்; உண்மையில் அது பெரிதே. எனினும் ஒரு பிரதேசத்தில் வீரம் விளைந்து வீரர்கள் பல்லாயிரவர் தோன்றித் தம் ஆற்றலைக் கொண்டு அரிய சாதனைகளை நிகழ்த்துவரேயாயின், அது பெரிது, பெரிது மிகப் பெரிது என்று பாராட்டிப் போற்றற்குரியது என்பதில் சிறிதேனும் ஐயமில்லை.

## செவிடுபடும்படி பேரொலி

அச்சுதன், அகளங்கன் என்று பெயர் படைத்த பேரரசனின் மாளிகையில் செவியைக் குளிரவைத்து சிந்தைக்கு இன்பமூட்டும் ஒலிகள் பல எங்கும்கேட்கின்றன. பெண்களின் பச்சொலி, நகைப்பொலி, சிலம்பொலி இசைக்கருவிகளின் ஒலி, மன்னர்கள், மந்திரிகள், தளபதிகள் இவர்களின் களிப்பு மிக்க உரையாடல் ஒலி, இன்னும் ஆனந்தத்தை அறிவிக்கக் கூடிய எத்தனையோ ஆரவார ஒலிகள். வீதிகளெங்கணும் பந்தல்கள், தோரணங்கள், விழாக்கள், பொது மக்களின் கும்மாளங்கள், கோஷங்கள். இவைகளின் ஒலி எங்கணும் நிரம்பிச் செவிகளில் பாய்ந்து துளைக்கின்றன. இச் சப்தங்களையும் தாண்டி அதிர்ந்து ஒலிக்கின்றன அநேக முரசங்கள். ஆனால் இன்னுமொரு ஒலி, இவைகளனைத்தையும் மிகுத்து, எல்லா இடங்களிலும் எதிரொலிக்கும்படி, கணக்கற்ற ஓசை அலைகளாக எழுந்து எல்லோருடைய செவிகளிலும் ஒவ்வொரு கணமும் ஓயாது வீழ்ந்து கொண்டிருக்கிறது. 'என்ன இது, காது செவிடு படும்படியான இப்புதிய ஒலி?' என்று ஒருவரையொருவர் வினவிக் கொள்கின்றனர். பாடலைப் படிக்கும்பொழுதுதான் நமக்கும் அந்த ஒலி கேட்கிறது. என்ன ஒலி அது என்பதையும் நாம் தெரிந்து கொண்டுவிடுகிறோம்.

அரசன் அகளங்கன்
அச்சுதன் முற்றத்து
அரசர் அவதரித்த
அந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடும் ஓசையினும்
கோவேந்தர் கால் தளையை
வெட்டிவிடும்
ஓசை மிகும்!

அகளங்கன் என்ற பேரரசனுக்குப் பட்டத்து இளவரசன் பிறந்துவிட்டான். அதனால் எங்கணும் ஆடல், பாடல், கொண்டாட்டம்; எங்கணும் இன்ப ஒலி. அன்று பட்டத்து இளவரசன் பிறந்த தன் ஞாபகமாக, தான் சிறைப்படுத்தி யிருக்கும் அத்தனை அரசர்களுக்கும் விடுதலை அளிக்க தீர்மானிக்கிறான் அகளங்கன். எனவே அவர்களின் கால்களிலே மாட்டப்பட்டிருக்கும் விலங்குகளைவெட்டி யெறியும்படி கொல்லர்களுக்கும் பணியாளர்களுக்கும் கட்டளை இடப்பட்டு விட்டது. அப்பணியும் நடந்துகொண்டிருக்கிறது. அவ்விலங்குகளை வெட்டி விடுவதால் ஏற்படும் சப்தம்தான் முரசுகளின் ஒலியையும் தோற்கடிக்குமாறு அவ்வளவு உயர்ந்து ஒலிக்கிறது. எத்தனை அரசர்கள் சிறைப்பிடிக்கப்பட்டிருந்தார்கள்; எவ்வளவு பெரிய பெரிய விலங்குகளை அவர்கள் தரித்திருந்தார்கள் என்பதையெல்லாம் நாமே யூகித்து அறிந்து கொள்ளலாம். அகளங்கனுக்கு இருந்த குழந்தை விருப்பு, வமிசாவளி வளர வேண்டுமென்று பற்று இரக்கம் வீரம் இவையனைத்தையும் ஒரே பாடலில் ஒன்றாகக் குழைத்துச் சொல்லிவிட்டார் புலவர். வீரத்தையும் வீரர்களையும்புகழ்ந்துஎத்தனையோ பேர் எத்தனையோ விதமாகச் சொல்லலாம், எனினும் அதை ஒரு புலவன் சொல்லி நாம் கேட்கும்பொழுது ஏற்படக்கூடிய இன்பம், வேறு எவ்வாற்றாலும் ஏற்படுவது இல்லை, புலவன் தனக்கென ஒரு புதிய முறையை வகுத்துக் கொண்டு அதைச் சொல்லுகிறான், கவிஞன் வாக்கினில் தான் என்ன வசிய சக்தி! மற்றவர்கள் சொல்லுவதனைத்தையும் கடந்து ஒலித்து, நம் இதயத்தைக் கவர்ந்து களிப்பூட்டும் வல்லமை அதற்குத்தான் உண்டு.

## வீரத்தை ஊட்டும் மது

எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்த தமிழ்ப் பாடல்களில் நானூற்றைப் பொறுக்கியெடுத்து இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு தொகுத்து அதற்கு அகநானூறு என்றுபெயரிட்டனர் தமிழ் மக்கள். அதே போன்று அதே காலத்தில் வேறு நானூறு பாடல்களை ஒன்றாகத் தொகுத்துப் புறநானூறு என்று ஒரு தலைப்பை எழுதி நம் தமிழ்ப்பரம்பரைக்குத் தந்தனர். புறநானூற்றுப் பாடல்கள் தொகுக்கப்பட்டு இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாகின்றன என்பதை மட்டும் நாம் அறிவோமே தவிர, அப்பாடல்கள் அக்கால அளவிற்கு எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன்னர் பிறந்தன என்பதை வரையறுத்துக் கூறும் சக்தியினை எவரும் படைத்திலர். புறநானூற்றுத் தமிழரின் ஆண்மையும் வீரமும் எத்தகைத்து என்பதை விளக்கும் புறநானூற்றுப் பாடல்கள் பல. அவற்றுள் ஒன்றை இங்குக் காணுவோம்.

வேந்தற்கு ஏந்திய தீந்தண் நறவம்
யாம் தனக்கு உறுமுறை வளாவ விலக்கி
வாய்வாள் பற்றி நின்றனென் என்று
சினவல் ஓம்புமின் சிறுபுல்லாளர்
ஈண்டே போல வேண்டுவன் ஆயின்
என் முறை வருக என்னான், கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
ஆண்டும் நிற்கும் ஆண்தகை யன்னே;

இப்பாடலைத் தேம்பாடல் என்றழைப்பது பொருத்தமானது. பாடல் தேன்போல் இனிக்கிறது என்பதால் மட்டுமல்ல. பாடலே ஓரளவுக்கு இனிக்கும் மதுவைப் பற்றியது. பெரும் பாத்திரங்கள் பலவற்றிலே மது நிரப்பி வைக்கப்பட்டிருக்கின்றது. போர் வெறியூட்டுவதற்கென்று தயாரிக்கப்பட்ட மது. வீரர்களின் படை கூட்டம் கூட்டமாக நிற்கின்றது. ஏற்கெனவே போர் வெறியேறிப்போய் நிற்கும் அவர்களின்முன், தன் சொற்களால் மேலும் போர் வெறியை ஊட்டிக்கொண்டு நிற்கிறான் அரசன். அதுவெல்லாம் போதாதென்று மேலும் போர் வெறியூட்டுவதற்காக மேலே கூறப்பட்ட மது அனைவருக்கும் வழங்கப்படுகிறது. அவரவர்கள் தங்களின முறைப்படி வந்து முன்நின்று மதுவை வாங்கிக்கொண்டு செல்கின்றனர். அரசனுக்கும் மது வழங்கப்படுகிறது. அப்படையிலே திரண்ட தோள்களும் பயங்கரமான மீசையும் கதித்த பார்வையும் காலனையும் கிலிகொள்ளச் செய்யும் தோற்றமும் கொண்ட எண்ணற்ற வீரர் பலர் உள்ளனர். அதில் ஒருவன் அரசனுக்கு நறவம் அளித்து முடியுமுன், தான் வாளை உருவிக் கொண்டு, மற்றவரை விலக்கித் தள்ளிவிட்டு, முன்னேறி வந்து நின்று முதலில் தனக்கு மது அளிக்குமாறு கேட்கிறான். மற்றையோருக்கு சினமூட்டக்கூடிய இச்செயலை நோக்குகிறார் புலவர். புலவருக்கு அவ்வீரனைப் பற்றியும் அவனுடைய பேராற்றலைப் பற்றியும் நன்கு தெரியும். உடனே மற்றவர்களை எச்சரிக்கிறார். ''தன் முறை வருமளவும் பொறுக்க முடியாது, அவசரப்பட்டு மதுவுக்காக இங்கு வந்து கரம் நீட்டித் தனக்கு முதலில் கொடுக்கும்படிகேட்டுநிற்கின்றானே இவனைக் கண்டு எவரும் சினமடையாதீர். எதற்கும் பின் தங்காது முன்செல்வது இவன் வழக்கம். போர்க்களத்திலும் இதுபோன்றே தன்முறை வரட்டும் எனக் காத்திருக்காது எல்லோருக்கும் முதலில்தானே விரைந்து சென்று எதிரிகளின்படைகளை வீழ்த்துபவன் இவன். இவன் ஆற்றல் சாமான்யமானதல்ல' என்ற பொருள்படும்படி பேசி மற்றவர்களின் விழிகளை இவன்பால் திருப்புகின்றார் புலவர். பாடிய புலவரின் பெயர் விரிச்சியூர் நன்னாகனார். பாடப்பட்டோர் யாரெனத் தெரிந்திலர், போர் வெறிக்காக வீரர்கள் உண்ட மதுவைப்பற்றிய இப்பாடலே படித்தோர்க்கு வீரத்தை யூட்டும் மதுவாக அமைந்துவிடுகிறது, நறவம் என்னும் பதத்திற்குத் தேன் என்ற பொருளும் உண்டு. எட்டு வரி கொண்ட இப் பாடலே ஒரு தனித் தேனடை போன்று நமக்குக் களிப்பூட்டுகின்றது.

## மனிதப்பண்பின் சிகரம்

புறநானூற்றுப் பாடல் மற்றொன்று பழமையிலும் வீரத்திலும் புகழ் பெற்ற குடியின் வரலாறு ஒன்றைச் சொல்கிறது.

வேந்தனின் மெய்க்காப்பாளன் ஒருவன், அரசனிடத்திலே அளவிறந்த பற்றும் விசுவாசமும் கொண்டவன்; அஞ்சா நெஞ்சன், ஆண்மையாளன். அவனுடைய புகழையும் அவனது முன்னோரின் புகழையும் அரசனுக்கு எடுத்து உரைக்கும் புலவர், வீரத்தை எடுத்துக் காட்டுவதோடு, மனிதப் பண்பின் சிகரத்தையும் நமக்குக் காட்டிவைக்கிறார்.

அரசர்கள், சீமான்கள், கோமான்கள் எவராயிருப்பினும் அவர்களுக்கென சில நடைமுறைப் பழக்க வழக்கங்கள் உண்டு. ஏதாவதொரு பானத்தை அருந்தும்பொழுது அவர்கள் தங்களின் மதிப்பிற்கும் மரியாதைக்கு முரிய புலவர்கள், அறிஞர்கள், பெரியோர்கள் எவரேனும் தம்முடன் அமர்ந்திருப்பின், அவர்களுக்கு அளித்த பின்னரே தாம் அருந்துவர். அவ்வாறு தாங்கள் உண்டது போக மிகுந்திருக்கும் பானமே தம்மை விடத் தாழ்ந்தோருக்கும் பணியாளர்களுக்கும் செல்லும். இது உலகின பொது இயல்பு.

எங்கணும் மாந்தர் கடைப்பிடித்துவரும் இந்நடைமுறைப் பழக்கத்தைத் தலைகீழாக மாற்றுகிறார் புலவர் இப்பாடலில்;

இவற்கு ஈத்து உண்மதி கள்ளே; சினப்போர்
இனக்களிற்று யானை இயல் தேர்க் குரிசில்!
நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை
எடுத்துஎறி ஞாட்பின் இமையான் தச்சன்
அடுத்து எறி குறட்டின் நின்று மாய்ந் தனனே;
மறப் புகழ் நிறைந்த மைந்தினேன் இவனும்
உறைப்புழி ஓலை போல
மறைக்குவன் பெரும!
நிற்குறித்து வருவேலே.

பாடலில் காட்சி விளக்கத்திலே மூவரைக் காண்கிறோம் நாம். அரசன் இருக்கின்றான். அவன் அருகில் புலவரும் அரசனின் மெய்க்காப்பாளரும் நிற்கின்றனர். அருந்துவதற்கேற்ற முறையிலே வளாவப்பட்டுத் தட்டுகளிலே காத்திருக்கின்றது கள். ஒளிபரப்பும் மதுக் கிண்ணத்தைக் கரங்களில் எடுக்கிறான் அரசன். அப்பொழுது புலவர் கரங்காட்டித் தடுக்கின்றார். இந்நிலையில்தான் பாடல் ஆரம்பிக்கிறது. பாடலின் பொருளை நாம் தெரிந்து கொள்ளும் பொழுது, ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பு தமிழ் மக்களின பண்பும் மாண்பும் எத்தகைத்தாய் எவ்வளவு உயரியதாய் இருந்தது என்பதை ஓரளவு தெளிவாகவே புரிந்துகொள்ளுகிறோம்.

வேந்தே! நின் பாட்டனுக்கு இவன் பாட்டன மெய் காப்பாளனாக இருந்தான். நின் பாட்டன் மீது பகைவர்கள் எறிந்த வேல்களனைத்தையும் தன் மார்பிலும் உடம்பிலும் தாங்கினான். அவ் வேல்களனைத்தும் அவன் உடம்பிலே பாய்ந்து நின்றன. அக்காட்சி தேரினுடைய சக்கரத்தைச் செய்வதற்காகஆர்க்காலோடு தச்சன் வடித்த குடம் போல் தோற்றியது. அவ் வேல்களனைத்தையும் உடம்பில் தாங்கியவாறே மாய்ந்தனன் அவன். இவனும் அவனைப்போன்றே மறப்புகழ் நிறைந்தவன். கதிரவனின் வெம்மையான கதிர்கள் உறைக்கும்பொழுது ஓலைக் குடை ஒருவனைக் காப்பது போல, நின்னைக் குறித்துப் பகைவரின் வேல்கள் பகலவனின் கதிர்கள் போன்று கணக்கின்றி வரும்பொழுது அவையனைத்தையும் இவனே தன் மார்பிலும், உடலிலும் தாங்கி நின்னைக் காப்பான். அத்தகைய ஆற்றல் படைத்த ஆண்மைசால் வீரன் இவன். ஆதலின் இவனுக்கே முதலில் கள் தருக! அதன் பின் நீ உண்க!''—இவ்வாறு புலவர் அரசனை நோக்கிக் கூறுகிறார்.

உலகம் கடை இடத்தைக் காட்டும் ஒரு பணியாளனுக்குப் புலவர் எவ்வளவு எளிதாக முதலிடத்தைத் தேடிக் கொடுத்துவிட்டார், அரசனே அவனுக்கு முதலில் மதுவை அளித்து அதன்பின் தான் உண்ணல் நன்று என்பதை எடுத்து விளக்கியதன் மூலம் பதவி வேறு, மனிதத் தன்மை வேறு; அதிகாரத் தொடர்பு வேறு, ஆத்மத் தொடர்பு வேறு என்பதை நன்கு பாகுபடுத்திக் காட்டிவிட்டார். வீரத்திற்கும் வீர மரபினர்க்கும் வேந்தன் முதலாய அனைவரும் மதிப்பீயவேண்டும் என்பது பாடலின் பல உள்ளுறை பொருள்களில் ஒன்று

இத்தகைய பெரும் பண்புகளை விட்டு ஒரு நாடு சரியும் பொழுதுதான், அதனுடைய ஆத்மம் சிதைந்து அதன் வாழ்வு அவல நிலை அடைகிறது. மேலே கண்ட பாடலைப் பாடியவர் ஒளவையார்.

(முற்றும்)

---

வரப்பெற்றோம்

## திரை உலகம்: 'சிரித்து வாழ வேண்டும்' மலர்

'சிரித்து வாழவேண்டும்' படத்தின் மலராக 'திரை உலகம்' வெளிவந்துள்ளது. வண்ண அட்டைப் படம் கண்களைக் கவரும்.

வசனகர்த்தா ஆர். கே. ஷண்முகம், நடன டைரக்டர் சலீம், நடிகையர் எல். காஞ்சனா, லதா, சோப்ரா, பாடகி ஜானகி, நம்பியார், உமாநாத், அங்கமுத்து ஆகியோரின் கட்டுரைகள் உள்ளன. பக்கங்கள் தோறும் பல படங்கள் நிறைந்த அழகு மலராக துரைராஜ் வெளியிட்டுள்ளார்.

விலை ரூ. 2. முகவரி 1/13, அம்மையப்ப முதலி தெரு, சென்னை-14.

---

## நாளைய நிகழ்ச்சி

பாரதி இளைஞர் சங்கம்: பாரதி பிறந்த நாள் விழா, மஹி தலைமையில் கவியரங்கம். அழ வள்ளியப்பா உரையாற்றுவார். பாரதி கலைக் கழகம், சௌந்தரீஸ்வரர் ஆலயம், சைதை. மாலை 6-45 மணி.

---

# விலைவாசி உயர்வை தடுக்க பெண்களுக்கு 5 அம்ச யோசனை

சென்னை, டிச. 8—விலைவாசி உயர்வை தடுப்பதற்காக பெண்களுக்கு 5 அம்ச யோசனை ஒன்றை சென்னையில் உள்ள இந்திய பெண்கள் சங்கம் வெளியிட்டுள்ளது.

நேற்று சென்னையில் நடந்த அந்த சங்கத்தின வருடாந்திர மாநாட்டில் இது சம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

அந்த தீர்மானத்தில் கூறப்பட்டிருந்ததாவது:

''அத்தியாவசியப் பொருள்களை பதுக்குவது கொள்ளை லாபமடிப்பது; கலப்படம் செய்வது, கடத்தலில் ஈடுபடுவது போன்ற குற்றங்களுக்கு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ யாரும் ஆதரவு அளிக்கக்கூடாது.

பெண்கள் பின் கண்ட 5 அம்ச யோசனையை பின்பற்ற வேண்டும்:—

1. உடனடி தேவைக்கு வேண்டிய அளவுக்கே மளிகை சாமான்களை பெண்கள் வாங்கவேண்டும்.

2. விரயத்தைத் தவிர்த்து சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

3. தோட்டத்தில் காய்கறி செடிகளை வளர்க்க வேண்டும்.

4. கள்ளக்கடத்தல், கள்ள மார்க்கெட் ஆகியவைகளுக்கு ஊக்கம் அளிக்கக் கூடாது. கள்ளத்தனமாக கடத்தப்பட்ட பொருள்களை பகிஷ்கரிக்க வேண்டும்.

செலவினங்களில் சேம நல நடவடிக்கைகளுக்கு முதலிடம் தரவேண்டும். அதற்குப் பின்னரே ஆடம்பரப் பொருள்களுக்கு செலவு செய்யவேண்டும்.

இவ்வாறு தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளது.

குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரத்தின் அவசியத்தை வற்புறுத்தி மற்றொரு தீர்மானம் நிறைவேறியது.

## அனாதை இல்லங்களுக்கு அதிக உதவி கோரிக்கை

தமிழ்நாட்டில் அனாதை இல்லங்களுக்கு அரசாங்கம் அளித்து வருகிற மானியம் தற்போது தலா 12 ரூபாய் என்று இருப்பதை தலா 20 ரூபாயாக உயர்த்தும்படி மற்றொரு தீர்மானம் கோரியது.

சினிமா படங்களில் ஆபாச காட்சி ஒதுக்கப்பட வேண்டும்; சென்னையில் ஒலிபெருக்கித் தொல்லை அகற்றப்பட வேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளையும் மாநாடு வெளியிட்டது.

மாநாட்டிற்கு சங்கத் தலைவர் சுசீலா இந்தர்சேன் தலைமை வகித்தார்.

கவுரவ செயலாளர் மந்தா கிருஷ்ணமூர்த்தி ஆண்டு அறிக்கை வாசித்தார் சங்கக் கட்டிடம் அமைந்துள்ள இடத்தில் சுமார் ஒரு லட்சம் ரூபாய் செலவில் புதிதாக கட்டப்பட்டுள்ள பெண்கள் விடுதி விரைவில் திறக்கப்படும் என்று அவர் அறிவித்தார்.

---

காய்கனி வியாபாரிகள்

முன்னணிச்சங்க

## புதிய தலைவர்

சென்னை, டிச. 8— சென்னை மாநகர சகல பழம்—பூ—காய்கறி வியாபாரிகள் முன்னணிச் சங்கப் பொதுச்செயலாளராக பாவலர் எஸ். கே. பழனிச்சாமி ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார். சென்னை மாவட்ட அவைத் தலைவர், முன்னாள் துணை மேயர் ஆ. செல்வராசன் ஆணையாளராக இருந்து நடத்திவைத்தார். சங்கத்தின் தலைவர்களாக மணவாளன், துணைத் தலைவர் ஆரியப்பன், மருதப்பிள்ளை, ராமச்சந்திரன் பிள்ளை, எஸ். அப்பாத்துரை, எம். ஆர். கோபாலன். துணை செயலாளர்கள், து. தமிழ்மணி, கே. எம். அனிபா, முத்துகிருஷ்ணன். பொருளாளர்: இராமு.

செயல் கமிட்டி உறுப்பினர்கள்:

எஸ். குருசாமி, கருப்பையா, சின்னத்துரை, ராமச்சந்திரன், புருஷோத்தமன், வி. பாலு, ஏ. அமீர்கான், சுந்தரம் பிள்ளை, எஸ். கே. இராமசாமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்கூட்டத்தில் இலட்சுமணனும் கலந்து கொண்டு உரையாற்றினர்.

சென்னை, கொத்தவால் சாவடியின் இட நெருக்கடியையும், சுகாதாரக் குறைபாட்டையும் போக்குவரத்து நெரிசலையும் தவிர்ப்பதற்கும் சம்பந்தப்பட்ட வியாபாரிகளின் வசதிக்குறைவை சீர் படுத்தவும், அரசாங்கத்தின் கவனத்திற்கு இந்தக் கோரிக்கையை கொண்டு போகவும் அதை செயல் உருப்பெற வைக்கவும், மேற்படி சென்னை மாநகர பழம்—பூ—காய்கறி வியாபாரிகள் முன்னணிச் சங்கம் ஆவன செய்யுமென்று தீர்மானிக்கப்பட்டது.

---

# சர்க்கரை ஆலைகளை தேசியமாக்க இந்திராவிடம் மகஜர்

புதுடெல்லி, டிச. 8—நாட்டில் உள்ள சர்க்கரை ஆலைகளை தேசியமயமாக்க வேண்டும் என்று கோரி இந்திரா காங்கிரஸ் வலது கம்யூனிஸ்டு எம். பி.க்கள் பிரதமர் இந்திராவிடம் மகஜர் அளித்துள்ளனர்.

சர்க்கரை ஆலைகளை நவீனமாக்கி சர்க்கரை உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமானால் இத்தொழிலை அரசே ஏற்று நடத்தியாக வேண்டும் என்று அவர்கள் தங்கள மகஜரில் வற்புறுத்தியுள்ளனர்.

இரு கட்சிகளையும் சேர்ந்த 257 எம்.பி.க்கள் இந்த மகஜரில் கையெழுத்திட்டுள்ளனர்.

அவர்கள் தங்கள் மகஜரில் கூறியுள்ளதாவது:—

சர்க்கரை ஆலைகளைதேசியமாக்கினால்தான் இத்தொழிலை நவீனமாக்கி சர்க்கரை உற்பத்தியை அதிகரிக்க முடியும். ஏற்றுமதியை பெருக்க முடியும். கரும்பு சாகுபடியாளருக்கு கரும்புக்கு நல்ல விலை அளிக்க முடியும்.

சர்க்கரை ஆலை அதிபர்கள் இத்தொழிலின் நலனையும், கரும்பு சாகுபடியாளர் நலனையும், மக்கள் நலனையும் புறக்கணித்துள்ளனர்.

இத்தொழிலில் கொள்ளை லாபம் அடிக்கப்படுவதைத் தடுப்பதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் அனைத்தும் தோற்றுப்போய் விட்டன.

சர்க்கரைத் தொழில் தேசியமாக்கப்படும் என்று பல தடவை உறுதி மொழி அளிக்கப்பட்டுள்ளது. தேசியமாக்குவதை ஆதரித்து ஏற்கெனவே உத்தர பிரதேச பீகார் சட்டசபைகளில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்திலும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

ஆனால் தேசியமய நடவடிக்கை தாமதப்படுத்தப்பட்டு வருகிறது. இதனை சர்க்கரை ஆலை அதிபர்கள் பயன் படுத்தி கோடி கோடியாக லாபம் சம்பாதித்து வருகிறார்கள்.

சர்க்கரை கம்பெனிகளின் ரிசர்வ் நிதியை சாப்பிட்டு வருகிறார்கள். ஆலைகளின் உறுப்புகளையும் விலையுயர்ந்த பகுதிகளையும் விற்றுப் பணமாக்கி வருகிறார்கள்.

இவ்வாறு மகஜரில் கூறப்பட்டுள்ளது.

---

## தேர்தல் செலவுகளைக் குறைக்க

# தி. மு. கழகம் புதிய யோசனை

மதுரை, டிச. 8—தேர்தல் செலவைக் குறைக்கவும், ஜனநாயக முறையில் தேர்தல் விதிகள் கடைப்பிடிக்கப்படவும் தி. மு. கழகம் புதிய யோசனைகளை தெரிவித்துள்ளது.

இது குறித்து விரைவில் சட்டத்திருத்தம் செய்யப்படவேண்டும் என்றும், அனைத்துக் கட்சிகள் அடங்கிய ஒரு உயர்மட்டக்குழு விரைவில் அமைக்கப்படவேண்டும் என்றும் தி. மு. கழகம் மத்திய சர்க்காரையும், தேர்தல் கமிஷனரையும் கேட்டுக்கொண்டுள்ளது.

மதுரையில் நடைபெற்ற தி. மு. கழக பொதுக்குழுவில் இதுபற்றிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தி. மு. க. பொதுக்குழுக் கூட்டம் நேற்று காலை 10-45 மணிக்கு ஆரம்பமாகியது.

மொத்த பொதுக்குழு உறுப்பினர்கள் 615 பேர். இவர்களில் 534 பேர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

இதல்லாமல் 131 பேர்களுக்கு விசேஷ அழைப்பு அனுப்பப்பட்டிருந்தது. இவர்களில் 97 பேர் கலந்து கொண்டனர்.

பொதுக் குழு நேற்று காலையும் மாலையும் நடந்தது.

தி. மு. க. பொது மாநாடு நடத்துவது உட்பட பல முக்கியத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

காலஞ்சென்ற பி. டி. ராஜன், மு. வரதராசனர், கே. எம். பாலசுப்பிரமணியம், வி.கே. கிருஷ்ணமேனன் "தமிழ்க்கடல்" ராய. சொக்கலிங்கம், தண்டாயுதபாணி பிள்ளை, கருமுத்து தியாகராஜ செட்டியார், மைசூர் மன்னர் ஜெயசாமராஜ உடையார், சரஸ்வதி அம்மாள் (சட்டசபை உறுப்பினர் கே. பி. சுந்தரசாமியின் மனைவி) சுச்சரிதாருபாளி, உண்ணுமலை அம்மாள் ஆகியோர் மறைவுக்கும், கொடைக்கானல் பஸ் விபத்தில் மரணம் அடைந்தவர்களுக்கும், பொதுக்குழுவில் அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

உறுப்பினர்கள் ஒரு நிமிடம் மவுனமாக நின்று மரியாதை செலுத்தினர்கள்.

பொதுக் குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் விவரங்களாவன:—

### பொது மாநாடு

கழக பொது மாநாட்டை வருகிற ஏப்ரல்மாதம் கடைசி வாரத்தில் கோவையில் நடத்த முடிவுசெய்யப்பட்டது. இந்த மாநாடு 4 நாட்கள் நடைபெறும்.

### பயிற்சி முகாம்

வாய்ப்புள்ள மாநிலங்களிலும் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் டிசம்பர் ஜனவரி மாதங்களில் மாணவர்கள், கழக சொற்பொழிவாளர்கள் ஆகியோருக்கான "மாநில சுயாட்சி கொள்கை விளக்க பயிற்சி முகாம்"களை நடத்துவது என்று பொதுக் குழு தீர்மானித்தது.

### சட்ட திருத்தம்

கழகத்தின் சட்ட திட்டங்களை செயற்குழு திருத்தியதை பொதுக்குழு ஏற்றுக் கொண்டது.

இந்த திருத்தத்தின்படி, கழக பொது மாநாட்டிற்கு இனி கழகத்தலைவரே தலைமை வகிப்பார்; மாநாட்டின் சிறப்பாளராக கழகத்தின் பொதுச் செயலாளர் இருப்பார்.

கழகத்தின் நிர்வாக வசதிக்காக, மற்ற திருத்தங்களும் செய்யப்பட்டன.

### மத்திய அரசுடன் ஒத்துழைப்பு

இந்திய நாட்டின் பொருளாதாரத்தை சீரழிக்கும் வகையில், வெளிநாடுகளோடு தொடர்புகொண்டு கள்ளக் கடத்தலில் ஈடுபட்டவர்கள்மீது, மத்திய சர்க்கார் எடுத்த நடவடிக்கைக்கு ஒத்துழைத்த தமிழக அரசை பொதுக்குழு பாராட்டுகிறது. இந்த நடவடிக்கையை இத்துடன் நிறுத்திவிடாமல், மேலும் தீவிரப்படுத்த வேண்டும் என்று மத்திய சர்க்காரை பொதுக்குழு வற்புறுத்துகிறது.

### இந்தியா முழுவதும் மதுவிலக்கு

தமிழகத்தில் முழுமையான அளவில் மதுவிலக்கு அமுல்படுத்தவும் குதிரை பந்தயத்தை அறவே ஒழிக்கவும் முடிவு எடுத்ததற்கு தமிழக அரசை பொதுக்குழு பாராட்

## ரூ. 5 கோடி வறட்சி நிவாரணம்

"தமிழ்நாட்டில் பருவ மழை தவறிவிட்டதால் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள மாவட்டங்களில் உடனடியாக நிவாரணப் பணிகளை மேற்கொள்ள ஆணை பிறப்பித்துள்ள தமிழக அரசை பொதுக் குழு பாராட்டுவதோடு, இந்த வறட்சி நிவாரணப் பணிக்குத் தேவைப்படுகிற நிதியை மத்திய அரசு மானியமாக வழங்கவேண்டுமென்று இப் பொதுக்குழு கேட்டுக்கொள்கிறது.

இந்த ஆண்டு தமிழகத்தில் பல்வேறு பகுதிகளில், பருவ மழை பொய்த்துவிட்டதால் கடுமையான வறட்சி நிலை நிலவுவதை தமிழக அரசு உணர்ந்து வறட்சிப்பணிகளுக்காக முதல் கட்டமாக தமிழக அரசு ரூ. 5 கோடி செலவிட ஒதுக்கியிருப்பதற்கு தமிழக அரசுக்குப் பொதுக்குழு நன்றி கூறுவதோடு, வறட்சி நிலவும் பகுதிகளில், நிலைமைகேற்ப விவசாயிகளுக்குக் கொடுத்திருக்கும் கடன்களை வசூலிப்பதை ஒத்தி வைக்கவேண்டும் என்றும், இந்த ஆண்டு நிலவரியை ஆங்காங்கேயுள்ள நிலைமைகளைக் கணக்கிட்டு தள்ளுபடி செய்ய வேண்டுமென்றும் பொதுக்குழு தமிழக அரசைக் கேட்டுக் கொள்கிறது.

மேற்கண்ட தீர்மானங்களை, பொதுக்குழு உறுப்பினர்கள் முன்மொழிந்து, வழிமொழிந்ததை, பொதுக்குழு ஏகமனதாக ஏற்றுக்கொண்டது.

டுவதுடன், இதனால் ஏற்படும் இழப்புக்கு மத்திய அரசு தகுந்த நிதி உதவி மாநில அரசுக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறது.

அனைத்து இந்திய அளவிலும் இவைகளை அமல்படுத்த நடவடிக்கை எடுக்கும்படி பொதுக்குழு வற்புறுத்துகிறது.

### மாநிலத்துக்கு அதிகாரம்

பொருளாதார முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக உள்ள கறுப்புப் பணத்தை ஒழிக்க, இப்போது மத்திய அரசிடம் உள்ள அதிகாரம் மாநில அரசுகளுக்கும் தரப்பட வேண்டும் என்று தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை ஏற்று, மாநில அரசுகளுக்கு அதிகாரம் வழங்கி கறுப்பு பணத்தை அறவே ஒழிக்க துணை நிற்குமாறு மத்திய அரசை வற்புறுத்துகிறது.

### கைத்தறி துணி

அண்மை காலத்தில் அகில இந்தியாவில் ஏற்பட்ட பொருளாதார தாழ்வு காரணமாக நூல், ஜவுளி தேக்கம் ஏற்பட்டு தமிழகத்தில் கைத்தறிநெசவு தொழில் பாதித்து இருப்பதை பொதுக்குழு கவலையோடு நோக்கி லட்சக்கணக்கான நெசவாளர்களுக்கு வாழ்வு தருவதற்கு

7-ம் பக்தி பார்க்க

## உழைப்பாளர் பொதுநலக் கட்சி பொதுக் கூட்டம்

சேலம், டிச. 8—சேலம் மாவட்டம் மேட்சேரியில் உழைப்பாளர் பொது நலக் கட்சி பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஏ. வீரப்பன் தலைமை வகித்தார்.

மாநில பொதுச் செயலாளர் யூ. எஸ். ராமமூர்த்தி, பி. முனிவேல், கு. ஆசைத்தம்பி, கோவிந்தராசு, துரை, மாரியப்பன், புலவர் முருகேசன் ஆகியோர் பேசினர்கள்.

சேலம், அழகாபுரம்ரெட்டியூர், நரசோதிப்பட்டி ஆகிய ஊர்களை அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து இருப்பதை எதிர்த்து தீர்மானம் நிறைவேற்றினர்.

## தேர்தல் செலவுக்கு கம்பெனிகளிடமிருந்து பணம் வாங்கலாமா?

மதுரை, டிச. 8—அரசியல் கட்சிகள், தங்களின் தேர்தல் செலவுக்கு தனியார் கம்பெனிகளிடமிருந்து பணம் வாங்கலாமா? என்ற கேள்விக்கு முதல்வர் கருணாநிதி பதில் அளித்தார்.

நேற்று மாலை பொதுக்குழு கூட்டம் முடிந்ததும், முதல் அமைச்சர் கருணாநிதி நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

அப்போது நிருபர்கள் கேட்ட கேள்விகளும், கருணாநிதி அளித்த பதில்களும் வருமாறு:—

கேள்வி: மொரார்ஜிதேசாய் நடத்தவிருக்கும் மறியல் போராட்டத்துக்கு திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆதரவு உண்டா?

கருணாநிதி: இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு நாடாளுமன்றத்தில் உள்ள தி. மு. கழகக் குழுவின் தலைவர்களிடமிருந்து அதுபற்றி "தலைமைக் கழகத்தின் கருத்து அறியப்பட்டது. புதுவை மாநில இறக்குமதி லைசென்சு ஊழல் சம்பந்தமாக நம்முடைய அதிருப்தியைக் காட்ட வெளிநடப்பு போன்ற ஜனநாயக ரீதியான முறைகளைத்தான் கையாள வேண்டும். நாம் எதிர்க்கட்சியாக இருந்த போதும் அப்படிப்பட்ட முறைகளைத்தான் தமிழக சட்டப் பேரவையில் கையாண்டிருக்கிறோம் என்பதை அவர்களுக்குச் சுட்டிக் காட்டி, மொரார்ஜி தேசாய் கூறுவது போன்ற முறைகளை நாம் ஆதரிப்பதில்லை என்பதை திட்டவட்டமாக கூறியிருக்கிறோம். அதை கழக சார்பில் மீண்டும் ஒரு முறை டெல்லியில் உள்ள அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்ல பொதுக் குழுவிற்கு வருகை தந்த நண்பர் ரா. செழியன் டெல்லிக்குப் புறப்பட்டார்.

கேள்வி: பொதுக்குழுவில் காலை நிகழ்ச்சிகள் நடந்த போது சலசலப்பு ஏற்பட்டதாக சொல்லப்படுகிறதே?

பதில்: கூட்டம் நடந்த இடம் நெருக்கடியாக இருந்ததால் கொட்டகையில் ஏற்பட்ட சலசலப்பு தவிர வேறு ஒன்றும் இல்லை.

### தேர்தல் திருத்தம்

கேள்வி: இந்தியாவில் பொதுத் தேர்தல் 6-ம் ஆண்டு வரும் முன்னதாகவே நடக்கும் என்ற சந்தேகம் ஏற்பட்டு இருக்கிறது. பொதுக்குழுவில் தேர்தல் விதிமுறை பற்றி தீர்மானம் வந்து இருக்கிறதே. இரண்டுக்கும் தொடர்பு இருக்கிறதா?

பதில்: தேர்தல் விரைவில் வரக்கூடும் என்ற சந்தேகத்துக்கும் இந்தத் தீர்மானத்துக்கும் எந்த தொடர்பும் கிடையாது. இதுபற்றி 2 ஆண்டுகளுக்கு முன்பு டெல்லியில் பிரதமரிடம் பேசிய போது, தேர்தல் முறை திருத்தப்படவேண்டும் என்பதை அவர் ஏற்றுக்கொண்டார். இந்தத் தீர்மானம் பிரதமருக்கு மீண்டும் நினைவு படுத்துமென்று நினைக்கிறேன்.

கேள்வி: இந்தத் தீர்மானத்தை பாராளுமன்றத்தில் தி. மு. கழக உறுப்பினர்கள் விளக்கிப் பேசுவார்களா?

பதில்: வாய்ப்பு கிடைக்கும் போது பேசுவார்கள்,

கேள்வி: தேர்தலுக்கு கம்பெனிகளிடமிருந்து நன்கொடை பெற அனுமதிக்கலாம் என்ற கருத்து கூறப்பட்டிருக்கிறது. அது பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்: தி. மு. கழகம் எந்தக் கம்பெனியிடம் இருந்தும் நன்கொடை வாங்குவது இல்லை.

கேள்வி:—கொடைக்கானல் மலை பஸ் விபத்தில் மரணம் அடைந்தோர் குடும்பங்களுக்கு நிதி உதவி அளிக்கப்படுமா?

பதில்;—இதுபற்றியவிவரம் கலெக்டரிடம் கேட்கப்பட்டிருக்கிறது. அறிக்கை கிடைத்ததும் முதலமைச்சர் நிதியில் இருந்து யார்-யாருக்கு எவ்வளவு கொடுக்கப்படும் என்று அறிவிக்கப்படும்.

கேள்வி:—கொடைக்கானல் மலையில் அடிக்கடி விபத்து நடக்கின்றன. தடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

பதில்: நடந்த விபத்துக்கு என்ன காரணத்தை அதிகாரிகள் ஆராய்ந்து வருகிறார்கள். இனிமேல் இதுமாதிரி விபத்துக்களை தடுக்க அதிகாரிகள் நடவடிக்கை எடுப்பார்கள்.

### சங்கடத்தை போக்குவோம்

கேள்வி: சைக்கிளில் விபத்துக்களை தடுக்க கண்ணாடி பொருத்த வேண்டும் என்று அரசாங்கம் கூறி இருப்பது பெரும் இடையூறாக இருப்பதாக கருதப்படுகிறதே?

பதில்: சங்கடங்கள் இருக்குமானால் அது பற்றி யோசிக்கப்படும்.

மேற்கண்டவாறு கருணாநிதி பதிலளித்தார்.

## குறும்புக்கார வாலிபரை சமாளிக்க பெண்களுக்கு ஜூடோ பயிற்சி

சென்னை, டிச. 8—குறும்பு செய்கிற வாலிபர்களைச் சமாளிப்பதற்காக பெண்களுக்கு ஜூடோ பயிற்சி உள்பட தற்காப்பு முறைகளில் பயிற்சி அளிக்கப்படவேண்டும் என்று சென்னையில் நடந்த இந்திய பெண்கள் மாநாடு கோரியுள்ளது.

பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் மாணவ, மாணவிகளிடையே ஒழுக்கம் நிலை பெறச் செய்வதற்கு அனைவரும் ஒத்துழைக்கவேண்டும் என்று வேறொரு தீர்மானம் கோரியது. மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் கட்டாய சீருடை முறை புகுத்தப்படவேண்டும் என்று அந்த தீர்மானம் கேட்டுக்கொண்டது.

## கடத்தல் ஆசாமிகள் ஓட்டம்!

## ரூ. $1\frac{1}{4}$ லட்சம் கிராம்பு மூட்டைகள் பறிமுதல்

பட்டுக்கோட்டை, டிச. 8—ரூ. $1\frac{1}{4}$ லட்சம் மதிப்புள்ள கிராம்பு மூட்டைகளை சுங்க அதிகாரிகள் கைப்பற்றினர். கடத்தல் ஆசாமிகள் கிராம்பு மூட்டைகளை போட்டுவிட்டு தப்பிவிட்டனர்.

இதுபற்றிக் கூறப்படுவதாவது:—

பட்டுக்கோட்டை சுங்க இன்ஸ்பெக்டர்கள் நள்ளிரவில் தம்பிக்கோட்டை கீழக்காடு அருகே கோட்டகம் என்ற இடத்தில் கள்ளக்கடத்தல் வேட்டையாட பதுங்கி இருந்தனர்.

அப்போது கடற்கரையில் இருந்து சில ஆசாமிகள் கடத்தல் கிராம்பு மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு வந்தனர். பதுங்கி இருந்த சுங்க அதிகாரிகள் துப்பாக்கியைக் காட்டி வழி மறித்தனர். உடனே அந்த ஆசாமிகள் வயலுக்குள் கிராம்புமூட்டைகளை வீசி எறிந்துவிட்டு தப்பி ஓடிவிட்டனர்.

அவர்கள் போட்டு விட்டுச் சென்ற 9 கிராம்பு மூட்டைகளையும் அதிகாரிகள் கைப்பற்றினர். அதன் மதிப்பு ரூ. 1 1/4 லட்சம் ஆகும்.

அவை இலங்கையிலிருந்து கடத்தி வரப்பட்டது என்று தெரிகிறது.

சுங்க அதிகாரிகள் அந்த ஆசாமிகளை வலைவீசித் தேடி வருகின்றனர்.

## இந்திரா காங்கிரசில் காமராஜர் சேரவேண்டும்: ராம்சுபாக்சிங் கோரிக்கை

புதுடெல்லி, டிச. 8—காமராஜர் இந்திரா காங்கிரஸ் கட்சியில் சேர வேண்டும் என்று இப்போது இந்திரா காங்கிரசில் சேர்ந்துள்ள ராம்சுபாக் சிங் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

ராம்சுபாக் சிங் இப்போது டெல்லி வந்துள்ள காமராஜரை சந்தித்துப் பேசலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

1969ல் காங்கிரஸ்கட்சியில் பிளவு ஏற்பட்டதிலிருந்து ராம் சுபாக் சிங் பழைய காங்கிரசில் இருந்துவந்தார்.

பின்னர் அவருக்கும், இதர பழைய காங்கிரஸ் தலைவர்களுக்கும் இடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது.

பிளவுக்குப் பிறகு காமராஜரும் இந்திராவும் முதன்முறையாக சந்தித்துப் பேசியபோது அச்சந்திப்பை ராம்சுபாக் சிங் வரவேற்ருர்.

இரு காங்கிரஸ் கட்சிகளும் இணைய வேண்டும் என்று அவர் தீவிரமாகக் கூறிவந்தார்.

சமீபகாலமாக பழைய காங்கிரசிலிருந்து ஒதுங்கி நின்றிருந்த அவர் சில தினங்களுக்கு முன்னர் இந்திரா காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார்.

நேற்று அவர் நிருபர்களிடம் பேசுகையில் பழைய காங்கிரசில் உள்ளவர்களை இந்திரா காங்கிரஸ் கட்சியில் சேர்த்துக்கொள்ள கதவைத் திறந்துவிடவேண்டும் என்று கோரப் போவதாக அவர் சொன்னர்.

இவ்விதம் கதவைத் திறக்கும் கொள்கையைக் கையாண்டால்தான் பழைய காங்கிரசில் உள்ளவர்கள் இந்திரா காங்கிரசில் சேரமுடியும் என்றும் அவர் சொன்னர்.

### காமராஜருக்கு வேண்டுகோள்

இந்திரா - காமராஜ் இடையிலான சந்திப்பு ஆரம்பத்திலிருந்தே தான் ஆதரித்து வந்துள்ளதை அவர் சுட்டிக் காட்டி "காமராஜர் இந்திரா காங்கிரசில் சேரவேண்டும்" என்று வேண்டுகோள் விடுத்தார்.

பிரதமர் இந்திராவை சந்திக்கப் போகிறீர்களா என்று நிருபர்கள் கேட்டதற்கு அவர் பதில் அளிக்கையில் "இக்கட்சியில் சேருவதற்கு முன்னரே இந்திராவை பல தடவை சந்தித்திருக்கிறேன். ஒரு தடவை உரவிலை உயர்ந்ததற்கு ஆட்சேபம் தெரிவிப்பதற்காக சந்தித்தேன்" என்று சொன்னர்.

ராம்சுபாக் சிங் காமராஜருடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர். இப்போது சென்னையிலிருந்து டெல்லி வந்துள்ள காமராஜரை ராம்சுபாக் சிங் சந்தித்துப் பேசி இந்திரா-காமராஜர் ஒத்துழைப்புக்கு முயற்சி மேற்கொள்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## நாகையில் அண்ணு சிலை: கருணாநிதி திறப்பார்

நாகப்பட்டினம், டிச. 8—அண்ணாவின் சிலை நாகையில் அமைக்கப்படுகிறது. இதனை டிசம்பர் மாதம் இரண்டாவது வாரத்தில் முதல்வர் கருணாநிதி திறந்து வைக்கிருர்.

அண்ணு சிலையமைப்புக்கான ஏற்பாடுகளை தி. மு. க. ஒன்றியச் செயலாளர் எஸ். பி. தங்கையா செய்து வருகிருர்.

நாகை மேலக்கோட்டை வாயில் காந்தி பாலத்தின் தென் புறத்தில் சிலை வைக்கப்படுகிறது. 5 அடி உயர பீடத்தின்மேல் $7\frac{1}{2}$ அடி உயரமுள்ள அண்ணாவின் முழு உருவச் சிலை அமைக்கப்பட இருக்கிறது.

4-ம் பக்தி தொடர்ச்சி

ஏற்ற முறையில் தற்போது தேங்கி இருக்கும் கைத்தறி துணிகளையும், லுங்கிகளையும் மாநில கூட்டுறவு சங்கத்தின் மூலம் வாங்குவதற்கு நடவடிக்கைகளை எடுக்கும்படி தமிழக அரசை பொதுக்குழு கேட்டுக்கொள்கிறது.

### ஊதிய முடக்கம்

மத்திய சர்க்கார் நடைமுறைப்படுத்தி உள்ள கட்டாய சம்பள பிடிப்பு சட்டத்திஞல் பணவீக்கத்தை கட்டுப்படுத்தும் பலன் எதிர்பார்த்த அளவு ஏற்படாமலும், விலைவாசியைக் கட்டுப்படுத்தும் பலன் ஏற்படாமலும் ஊதிய முடக்கத்தை மட்டுமே ஏற்படுத்தி உழைக்கும் தொழிலாளர்களை பெரும் பாதிப்புக்கு உள்ளாக்கி இருப்பதால் இந்த சட்டத்தைத் திரும்பப் பெறவேண்டும் என்று மத்திய சர்க்காரை பொதுக்குழு வற்புறுத்துகிறது.

### ரெயில்வே தொழிலாளர்

அண்மையில் நடைபெற்று முடிந்த ரெயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் காரணமாக பல நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் மீது வேலை இறக்கம், வேலை நீக்கம் போன்ற நடவடிக்கைகளை உடனடியாக கைவிட்டு அவர்களை வேலையில் அமர்த்த வேண்டிய அவசர அவசியத்தை மத்திய அரசுக்கு பொதுக்குழு வற்புறுத்துகிறது.

### தேர்தல் முறை

இந்தியாவில் தற்போது கடைபிடிக்கப்படும் தேர்தல் முறை, தேர்தல் பணச்செலவு ஆகியவை குறித்து நாளெங்கும் விவாதம் எழுந்து இருப்பதை மனதில்கொண்டு உலகிலேயே உயர்ந்த ஜனநாயக நாடான இந்தியாவில் இந்த துறையில் விமர்சனத்துக்கு அப்பாற்பட்ட முறைகளை இயன்ற அளவு விளங்கவேண்டும் என்கிற மிகப்பெரிய பொறுப்பை உணர்ந்து தேர்தல் முறை குறித்தும் செலவு குறித்தும திருத்தங்கள் வழங்கி அனைத்துக்கட்சிகளும் பங்கு ஏற்கும் உயர்மட்டக் குழுவை விரைவில் அமைக்க வேண்டும் என்று வற்புறுத்துவதுடன் பெருமளவு பணச் செலவை குறைக்கும் வகையில் முதல் கட்டமாக வேட்புமனு தேர்தல் நாளுக்கும் தாக்கல் செய்யும் நாளுக்கும் இடைவெளி 15 நாட்களுக்கு உட்பட்டதாக இருக்கும் வகையில் விதிமுறைகளை உடனடியாக திருத்தி அமைக்கும்படி மத்திய சர்க்காரையும் தலைமை தேர்தல் கமிஷனையும் பொதுக்குழு கேட்டுக் கொள்கிறது.

### அரிசன கூட்டுறவு சங்க அங்கத்தினர்களுக்கு

## வீடுகட்ட கடன் தொகை

ஈரோடு, டிச. 8—ஈரோட்டிற்கு அருகில் உள்ள கண்ணுடையாம்பாளையத்தில் இருக்கும் அரிசனக் கூட்டுறவு வீடுகட்டும் சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு வீடு கட்டுவதற்கு கடன தொகை வழங்கப்பட்டது.

விழாவிற்கு மொடக்குறிச்சி ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர் முத்துசாமி தலைமை தாங்கினர். சேலம் வட்டார வீட்டு வசதிச் சங்கங்களின் துணைப்பதிவாளர் வி. தே. கந்தசாமி சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு வீடுகட்டும் கடனில் முதல் தவணைத் தொகைக்கான 'செக்'கை வழங்கினர். மொடக்குறிச்சி ஊராட்சி ஒன்றிய ஆணையாளர் தேவராஜன் கூட்டுறவு கொடியினை ஏற்றி வைத்தார்.

ஈரோடு கூட்டுறவு கட்டிடச் சங்கத் தலைவர் பாலசுப்பிரமணியம் சங்கத்தின் பெயர் பலகையினை திறந்து வைத்தார். ஈரோடு சரக வீடு கட்டும் சங்கங்களின் பதிவாளர், என் ஆர். ஜெயசந்திரன் விழாவற்கான ஏற்பாடுகளைக் கவனித்து விழாவில் சிறப்புரை ஆற்றினர்.

### அமைப்பாளர் உட்பட

## 15 அதிமுகவினர் கைது: ரூ. 25,000 இரும்பு கம்பி திருட்டு எதிரொலி

சென்னை, டிச. 8— ரூ. 25 ஆயிரம் மதிப்புடைய இரும்புக் கம்பிகள் திருட்டுப் போனது சம்பந்தமாக அ. தி. மு. க. அமைப்பாளரையும் அ.தி.மு.க. உறுப்பினர்கள் 14 பேரையும் போலீசார் கைது செய்தனர்.

இது குறித்த விவரமாவது: சென்னை 35-வது வட்டத்தில் அ. தி. மு. க. அமைப்பாளராக இருப்பவர் ஜெயராமன்.

இவர் அ. தி. மு. க. உறுப்பினர்கள் 14 பேரைவைத்துக் கொண்டு அப்பா ராவ் கார்டனில் உள்ள பல கம்பெனிகளிலும் இரும்புக் கம்பிகளையும் அலுமினிய தகடுகளையும்திருடி வந்தாராம். இது சம்பந்தமாக ஜெயராமனையும், மற்ற அ. தி. மு. க. உறுப்பினர்களையும் பெரியமேடு போலீசார் கைது செய்தனர்.

திருட்டுப் போனதாகக் கூறப்படும் ரூ 25 ஆயிரம் மதிப்புடைய பொருள்களையும் போலீசார் கைப்பற்றினர்.

ரூ. 12 ஆயிரம் மதிப்புடைய அலுமினியத் தகடுகள், ரூ. 9 ஆயிரம் மதிப்புடைய இரும்புக் கம்பிகள், ரூ. 4 ஆயிரம் மதிப்புடைய ஸ்டீல் தகடுகள் ஆகியவைகளை போலீசார் கைப்பற்றியிருக்கின்றனர்.

### புடவை திருட்டு

மேலும் பூங்கா நகர்பகுதி அமைப்பாளர் அக்கீம் என்பவரின் வீட்டில் ஆளை வைத்து இரண்டு புடவைகளை திருடி இவர் விற்றிருப்பதாகவும் கூறப்படுகிறது.

ஆனல் இதே பகுதி அமைப்பாளர் அக்கீம் ஜெயராமனை ஜாமீனில் விடுவிக்க முயற்சித்து முடியாமல் போய்விட்டதாகவும் தெரிகிறது.

## இன்றைய சினிமா

சென்னை

ராம் கலியுகக் கண்ணன்
நியூ எல்பின்ஸடன் நிர்மால்யம்
நேஷனல் பாத பூஜை
ஸ்ராஸ் சட்டைக்காரி

தாம்பரம்

நேஷனல் சிரித்து வாழ வேண்டும்
எம். ஆர். தியேட்டர் ராம பக்த ஹனுமான்

வில்லிவாக்கம்

ராயல்: ராஜநாகம்

குரோம்பேட்டை

வெற்றி: தாய்ப்பாசம்

5-ம் பத்தி தொடர்ச்சி

உள்பட எல்லா முக்கிய வசதிகளும் உள்ளன.

## அழகிகளுடன் உல்லாசமாக இருந்த லல்லு ஜோகி பற்றி புதிய தகவல்:

# 85 ரூபாய்க்கு போலீஸ் காரராக வேலை பார்த்த 'கடத்தல் மன்னன்'

பம்பாய், டிச. 8—ஏராளமான அழகிகளுடன் உல்லாசமாக வாழ்க்கை நடத்திய லட்சாதிபதியான பிரபல கடத்தல் மன்னன் லல்லு ஜோகி பற்றி தற்போது புதிய தகவல்கள் கிடைத்துள்ளன.

இவர் சுதந்திரப் போராட்டக் காலத்தில் ரூ. 85 சம்பளத்தில் வேலை பார்த்தவர் என்றும் அப்போது கடத்தல் மன்னர்களிடமிருந்து லஞ்சம் வாங்கியவர் என்றும் புதிய தகவல்கள் கிடைத்துள்ளன.

மஸ்தானின் கூட்டாளியாக இருந்து கடத்தல் வியாபாரத்தில் மின்னல் வேகத்தில் முன்னேறி கோடிக் கணக்கில் பணம் சம்பாதித்த லல்லு ஜோகி பற்றி ருசிகரத் தகவல்கள் இப்போது கிடைத்துள்ளன.

குஜராத் மாநிலத்தின் கடத்தல் மன்னர்கள் வரிசையில் லல்லு ஜோகி, இரண்டாவது இடத்தை வகிக்கிறவர் என்று கருதப்படுகிறது. அவருக்கு வயது 37.

அவருடைய முக்கிய வருத்தம்.

அவருக்கு 2 அண்ணன்மார்கள் இருக்கிறார்கள். அவர்களில் மூத்தவரான ராம்பாய் ஒரு கிராம முன்சீப். மதுக்கடை வைத்திருக்கிறார்.

மற்றொரு சகோதரரான பானுபாய், கடத்தல் வேலையில் தீவிரமாக ஈடுபட்டுள்ளார்.

மூன்று சகோதரர்களில் இளையவரான லல்லு ஜோகி துணிச்சல் மிகுந்தவர்.

கடத்தல் தொழிலில் அவருக்கு தற்போது உறுதுணையாக இருப்பது அவருடைய அண்ணன் பானுபாய்.

### போலீஸ்காரர்

லல்லு ஜோகி, கோவா சுதந்திரப் போராட்ட காலத்தில் 85 ரூபாய் சம்பளத்தில் போலீஸ்காரராக வேலை பார்த்தவர், 1956-ம் ஆண்டில் அவர் அந்த வேலையை ராஜினாமா செய்துவிட்டு, கோவா விடுதலைப் போராட்டத்தில் குதித்தார். அவரைப் பாராட்டி, கிராம மக்கள் சார்பாக தாமிரப் பத்திரம் அளிக்கப்பட்டது. மாதா மாதம் 200 ரூபாய் உதவிப் பணமும் அவருக்கு அளிக்கப்பட்டு வந்தது.

அவருடைய குடும்பம் வறுமையால் வாடியது. குறுக்குவழியில் பணம் சம்பாதிக்க அவர் தீர்மானித்தார்.

### கடத்தல்காரருடன் தொடர்பு

வல்லுஜோகி போலீஸ்காரராக இருந்தபோது அவருக்கு ஒரு கடத்தல்காரருடன் தொடர்பு ஏற்பட்டது. புனம்சந்த் ஷா என்ற அந்தக் கடத்தல்காரருக்கு லல்லு உதவியதாகவும் அதற்காக லல்லு பணம் வாங்கியதாகவும் கூறப்படுகிறது.

கோவா விடுதலைப் போராட்டம் முடிந்தவுடன் மீண்டும் அந்தக் கடத்தல்காரருடன் தொடர்பு கொண்டு அவருக்கு உதவியாக கடத்தல் வேலையில் ஈடுபட்டாராம். அதற்காகவே அவர் ஒரு மோட்டார் சைகிள் வாங்கி, டாமன், வாபி நகரங்களுக்கிடையே போய்வந்ததாக கூறப்படுகிறது. அதைத் தொடர்ந்து அவருக்கு நிறைய வருமானம் கிடைக்க ஆரம்பித்தது.

அதைத் தொடர்ந்து சொகுசு கார் ஒன்றை வல்லு

### முன்னாள் முதல்வரின் நண்பர்

கோவா மாநிலத்தின் முன்னாள் முதலமைச்சருடைய ஆதரவு லல்லுவுக்கு கிடைத்திருந்ததாக கூறப்படுகிறது. லல்லு ஜோகியைக் கைது செய்ய உள்நாட்டு பாதுகாப்பு பராமரிப்பு சட்டத்தின்படி சமீபத்தில் வாரண்டு உத்தரவு பிறப்பிக்கப்பட்ட போது, நொடிப் பொழுதில் லல்லுவுக்கு தகவல் எட்டியது. அவர் உடனே தலைமறைவாகிவிட்டார். ஒரு வாரம் கழித்து புல்சார் நகரில் போலீஸ் அதிகாரியிடம் அவர் சரண் அடைந்தார்.

ஜோகி வாங்கினார். அவருடைய குழந்தைகள் புல்சார் நகரில் உள்ள கான்வெட் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டன. அவருடைய குடும்பம் வசித்துவருகிற டாமன் நகரிலிருந்து சுமார் 50 கிலோ மீட்டர் தூரத்திற்கு அப்பால் உள்ள புல்சார் நகருக்கு அந்தக் குழந்தைகள் தினந்தோறும் அந்தக் காரில் அழைத்துச் செல்லப்படுகின்றனர். இந்தப் பழக்கம் இன்று வரை நடந்து வருகிறது.

கோடீசுவரராக மாறிவிட்ட லல்லு ஜோகி கோபம் மிகுந்தவர். முரட்டு சுபாவம் உள்ளவர். தந்திரமிக்கவர் என்று கூறப்படுகிறது.

சுயநலனைக் காத்துக்கொள்வதில் அவர் கண்ணும் கருத்துமாக இருப்பவராம். கடத்தல் வேலையில் அவருடைய ஆசாமிகளில் யார் மீதாவது அவருக்கு சந்தேகம் ஏற்பட்டால், படகுகளில் செல்லும்போது, நடுக்கடலிலேயே அவரைத் தீர்த்துக்கட்ட அவர் உத்தரவிடுவாராம்.

விரைவில் லல்லு ஜோகியின் சாமர்த்தியம் ''கடத்தல் புள்ளிகளின் உலகத்தில் பரவியது. அவருடன் கடத்தல் மன்னர் மஸ்தான் தொடர்பு கொண்டு கடைசியில் அவரை கூட்டாளியாக சேர்த்துக் கொண்டார். அதைத் தொடர்ந்து லல்லு மின்னல் வேகத்தில் பணம் சம்பாதிக்க ஆரம்பித்தார்.

சிறிது காலம் கழித்து, மஸ்தானுக்கு வந்துசேரவேண்டிய 55 லட்சம் ரூபாய் தங்கத்தை நடுக்கடலில் லல்லு ஜோகி அபகரித்துச் சென்றுராம். அதைத் தொடர்ந்து இருவருக்கும் இடையே மோதல் ஏற்பட்டது.

### மர்ம அரண்மனை

கோவா மாநிலத்திலுள்ள டாமன், உத்வாது, கோவா ஆகிய ஊர்களில் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள விவசாயப் பண்ணைகளுக்கு உரிமையாளராக லல்லு இப்போது இருக்கிறார். அந்தப் பண்ணைகளில் இருந்து 4 லட்சம் ரூபாய் வருமானம் கிடைக்கிறது என்றும் அதற்காக அவர் ஒரு காசுகூட வரி செலுத்தவில்லை என்றும் கூறப்படுகிறது.

அந்த விவசாயப் பண்ணைகளில் ஒன்று அதாவது உத்வாது நகரில் உள்ள விவசாய பண்ணை முன்பு டாடா குடும்பத்திற்கு சொந்தமாக இருந்தது. அந்த பண்ணையை 40 லட்சம் ரூபாய் விலைக்கு லல்லு ஜோகி வாங்கிவிட்டாராம்.

இந்த 140 ஏகர் பண்ணையில் அவர் பல ஜீப் கார்களையும் ஒரு குதிரையையும் வைத்திருக்கிறார். அங்கு கட்டப்பட்டுள்ள சொகுசு மாளிகையில் டெலிபோன் டெலிவிஷன்

1-ம் பத்தி பார்க்க

## பம்பாயிலிருந்து அழகிகள்

லல்லு ஜோகியின் கடத்தல் பொருள்கள் யாவும் சேமித்து வைக்கப்படும் கிடங்காக இந்த மாளிகை பயன்படுத்தப்பட்டு வந்தது.

முக்கிய போலீஸ் அதிகாரிகள் உள்பட பல பிரமுகர்களை லல்லு, தமது மாளிகைக்கு அழைப்பாராம். விருந்தாளிகளுக்காக பம்பாயிலிருந்து அழகிகளை அவர் தருவித்ததாக கூறப்படுகிறது.

மின்னல் வேகத்தில் கார் ஓட்டுவது அவருடைய பொழுது போக்குகளில் ஒன்று. போலீசாரின் துப்பாக்கியால் கடுவதும் அவருக்குப் பிடிக்கும். அவர் எப்போதும், தமது காரில் 2 துப்பாக்கிகளை தயாராக வைத்திருக்கிறார்.

### விடுதலை வீரர்

போர்ச்சுகீசிய ஆட்சிக்கு எதிராக கோவா பகுதியில் நடந்த விடுதலைப் போராட்டத்தில் தீவிரபங்கு கொண்டவர் அவர். சுதந்திரப் போராட்ட வீரராக சிறை செல்லாமல், கடத்தல் மன்னனாக சிறை செல்ல நேரிட்டிருக்கிறதே என்பது

## ஜெயப்பிரகாஷ் தலைமையில்

# "என்னைக் கவிழ்க்க சதி நடக்கிறது" இந்திரா குற்றச்சாட்டு

புதுடெல்லி, டிச. 8—"என்னைப் பதவியிலிருந்து வெளியேற்ற பிற்போக்கு சக்திகள் ஜெயப்பிரகாஷ் தலைமையில் கூட்டணி சேர்ந்துள்ளன" என்று பிரதமர் இந்திரா காந்தி குற்றம் சாட்டியுள்ளார்.

"ஜெயப்பிரகாஷுடன் பேச்சு நடத்தவே வழி இல்லையா" என்றும் இந்திரா சொன்னார்.

"ஜனநாயகத்தை எப்படி அழிப்பது என்பது பற்றி யாருடனாவது பேச்சு நடத்த முடியுமா?" என்று கேட்டார் இந்திரா.

பீகார் சட்டசபையை கலைப்பதே தங்கள் கோரிக்கை என்று ஜெயப்பிரகாஷ் கூறிய போதிலும், என்னைப் பதவியிலிருந்து வெளியேற்றுவதே அவர்களுடைய பிரதான நோக்கமாகும். இதுவரையில் பேச்சு நடத்த முடியுமா என்றும் அவர் கேட்டார்.

பம்பாயிலிருந்து வெளியாகும் 'பிளிட்ஸ்' ஏட்டின் ஆசிரியர் கரஞ்சியாவுக்கு அளித்த ஒரு பேட்டியின் போது பிரதமர் இந்திரா காந்தி இவ்வாறு கூறினார்.

தன்னைப் பதவியிலிருந்து வெளியேற்ற 1971ல் எதிர்க் கட்சிகூட்டணி உருவாகியதை இந்திரா குறிப்பிட்டு மேலும் கூறியதாவது:

"இப்போது என்னை வெளியேற்ற மறுபடியும் ஜெயப்பிரகாஷ் தலைமையில் கூட்டணி உருவாகியுள்ளது. என்னை எதிர்ப்பவர்களுடன் அவர் போய் சேர்ந்தார். அல்லது அவர்கள் வந்து ஜெயப்பிரகாஷுடன் சேர்ந்துகொண்டனரா என்று எனக்குத் தெரியாது. யார் யாருடன் சேர்ந்தார் என்று கூறுவது கடினம்.

ஊழலை எதிர்ப்பதாக ஜெயப்பிரகாஷ் கூறுகிறார். ஆனால் உலகமறிந்த ஊழல்காரர்களிடமிருந்து அவர் ஆதரவை ஏற்றுக்கொண்டுள்ளார். அப்படியிருக்கும் போது ஜெயப்பிரகாஷ் ஊழலை எதிர்த்துக் கிளர்ச்சி நடத்துவதாக நான் ஏற்கமாட்டேன்.

### ஊழல்காரர்கள்

ஒரிசாவில் அவருடைய ஆதரவாளர்கள் யார்? உத்தரபிரதேசத்தில் அவருடைய ஆதரவாளர்கள் யார்? பிற மாநிலங்களில் அவரை ஆதரிப்பவர்கள் எப்படிப்பட்டவர்கள்? இவர்களுடைய பெயர்களையெல்லாம் நான் கூறவேண்டியதில்லை. ஆனால் இன்று அப்படிப்பட்ட நபர்கள்தான் ஊழலை ஒழிக்க வேண்டுமென்று கோஷமிடுகின்றனர். முதலில் நீங்கள் உங்களைத் திருத்திக்கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு நான் கூறுவேன்.

தன்னை ஆதரிக்கும் ஊழல்காரர்களைப் பற்றி ஜெயப்பிரகாஷ் ஒரு வார்த்தைகூடக் கூறவில்லையே.

### வர்க்கப் போராட்டம்

புதுவித வர்க்கப் போராட்டத்தைக் கிளப்பிவிட இப்போது ஒரு முயற்சி நடக்கிறது. எந்தவிதமான சோஷலிசத்தையும், சமுதாயத்தில் எந்தவிதமான தீவிர மாறுதல்களையும் விரும்பாதவர்கள் இப்போது ஒன்று சேர்ந்து பழைய பாணியில் எதிர்க்கட்சிக் கூட்டணியை உருவாக்குகிறார்கள்,

இவ்வாறு இந்திரா காந்தி கூறினார்.

# மின்சார ரெயிலிலிருந்து விழுந்து வாலிபர் மரணம்

சென்னை, டிச. 8—மின்சார ரெயிலிலிருந்து விழுந்து வாலிபர் ஒருவர் மரணமடைந்தார்.

நேற்று காலை மாம்பலம்—சைதாப்பேட்டை இடையில் மின்சார ரெயில் சென்று கொண்டிருந்தபோது இவர் தவறி விழுந்து படுகாயமடைந்தார். அவர் பல்லாவரத்தை அடுத்த பம்மல் கிராமத்தைச் சேர்ந்தவர். பெயர் சேஷாத்திரி. வயது 18 உடனடியாக அவர் அரசினர் பொது மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அங்கு அவர் மரணமடைந்தார்.

# ஜெர்மனி போகிறார் சிவாஜி கணேசன்

சென்னை, டிச. 8—சிவாஜி கணேசன் ஜெர்மன் நாட்டுக்குச் செல்கிறார்.

இந்த மாதம் 23-ம் தேதி திங்கட்கிழமை அவர் ஜெர்மனிக்கு பயணமாகிறார். அங்கிருந்து வேறுபல ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லவும் சிவாஜி திட்டமிட்டிருக்கிறார்,

சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு பொங்கலுக்கு முன் அவர் சென்னை திரும்புவார். ஜனவரி 10-ம் தேதி சென்னைக்குத் திரும்பும் வகையில் பயணத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

ஜெர்மனியில் தமது மகள் சாந்தியின் வீட்டில் சிவாஜி தங்கியிருப்பார்.

### சபரிமலை புறப்பாடு

சிவாஜி கணேசன் இன்று சபரிமலைக்குச் செல்கிறார். சிவாஜியுடன் அவரது சகோதரர்கள். மகன்கள் ஆகியோரும் சபரிமலைக்குச் செல்கின்றனர்.

சபரிமலைக்குச் செல்வதை முன்னிட்டு நேற்று அவரது வீட்டில் விசேஷ அய்யப்பன் பூஜை நடந்தது.

ஷெரீப்பாக நியமிக்கப்பட்டிருக்கும் எம். ஏ. எம். ராமசாமி குமரி அனந்தன், ஏவி. எம். ராஜன், எம். எஸ். விஸ்வநாதன், டைரக்டர்கள் திருலோகசந்தர், பி. மாதவன். மற்றும் பல அய்யப்ப பக்தர்கள் பூஜையில் கலந்துகொண்டனர்.

அய்யப்பன் பூஜையின்போது வீரமணி, ராதா, சோமு, மாஸ்டர் ராஜு ஆகியோர் பக்திப் பாடல்களைப் பாடினர்

சபரிமலை யாத்திரையை முடித்துக்கொண்டு டிசம்பர் 11-ம் தேதி சிவாஜியும் குழுவினரும் சென்னை திரும்புவர்.

சபரிமலையிலிருந்து திரும்பியதும் 13ம் தேதி வெள்ளிக்கிழமை சிவாஜி சிங்கப்பூர் செல்கிறார். அங்கிருந்து 15-ம் தேதி சென்னை திரும்புவார்.

#### ரேஷன்

## உண்டா? இல்லையா?

சென்னை, டிச. 8—தமிழ் நாட்டில் ரேஷன் உண்டா இல்லையா என்பதற்கு, உணவு இலாகா அதிகாரி சிவ. சுப்ரமணியம் பதில் அளித்தார்.

இதுகுறித்து நேற்று அவர் நிருபர்களிடம் கூறியதாவது;—

ரேஷன் டைரக்டர் என்று புது அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார், சென்னை நகர உணவு விநியோகத்திற்காக இவர் நியமிக்கப்பட்டுள்ளார்.

இந்த நியமனத்தை வைத்து ரேஷன் உண்டா, இல்லையா என்பதை சொல்ல முடியாது"

மேற்கண்டவாறு அந்த அதிகாரி கூறினார்.

### டெல்லி அனுமதி

மேலும் அவர் நிருபர்களிடம் கூறியதாவது:

கம்பு, சோளம், கேழ்வரகு போன்ற புஞ்சை தானியங்கள் மீது, கட்டாயக் கொள்முதல் விதிப்பதற்கு, மத்திய சர்க்கார் அனுமதி கொடுத்து விட்டது.

எப்பொழுது எவ்வளவு கொள்முதல் செய்யப்படும் என்பது பிறகு முடிவுசெய்யப்படும்.

# யாசின் பந்துக்களின் கார்கள் திருப்பி தரப்பட்டன

சென்னை, டிச. 8—சென்னை போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டார்கார்கள் கடத்தல் மன்னர் என்றுகூறப்படும் யாசினின் சொந்தக்காரர்களிடம் திருப்பி ஒப்படைக்கப்பட்டுவிட்டன.

அந்தக் கார்களில் ஏதாவது மர்ம அறை இருக்கிறதா என்பதைசோதித்துப் பார்ப்பதற்காகபோலீஸ் கமிஷனர் அலுவலகத்திற்கு அந்தக் கார்கள் கொண்டுவரப்பட்டிருந்தன.

# வியாபாரிகள் சங்கம் எதிர்ப்பு: தி. மு. கழக பொதுக்குழு முடிவுக்கு

ஆரணி, டிச. 8—உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டும் என்று மதுரையில் நடைபெற்ற தி. மு. கழகச் செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது அல்லவா?

இதற்கு வட ஆற்காடு மாவட்ட வியாபாரிகள் சங்கம் எதிர்ப்பு தெரிவித்துள்ளது.

ஆரணி மளிகை வியாபாரிகள் சங்கத்தின் ஆதரவில் வட ஆற்காடு மாவட்ட வியாபாரிகள் மாநாடு இன்று ஆரணியில் தமிழ்நாடு வர்த்தகக் கழகத் தலைவர் ஈரோடு கேசவலால் காளிதாஸ் சேட் தலைமையில் நடைபெற்றது. அனைவரையும் ஆரணி மளிகை வியாபாரிகள் சங்கத் தலைவர் என். பல்ராம நாயுடு வரவேற்றார்.

### "பஞ்சம் வரும்"

கேசவலால் காளிதாஸ் சேட் தலைமை உரையில் கூறியதாவது: கலப்படத்தை ஒழிக்க வியாபாரிகள் தீவிர கவனம் செலுத்தவேண்டும். கலப்படம் செய்யும் வியாபாரிகளை வியாபாரிகள் பகிஷ்காரம் செய்யவேண்டும். எல்லாப் பொருள்களுக்கும் அரசாங்கம் ஒருமுனை வரி விதிக்க வேண்டும். மதுரையில் கூடிய தி. மு. க. பொதுக்குழு உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறது. அவ்வாறு அரசாங்கம் வியாபாரத்தை எடுத்தால் நாட்டில் உணவுப் பஞ்சம் ஏற்படும். விநியோக முறை ஒழுங்காக இருக்காது. எனவே அரசாங்கம் உணவு தானிய வியாபாரத்தை மேற்கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து தமிழ்நாடு வர்த்தகக் கழகத்தின்பொதுச்செயலாளர் குடந்தை பி. ஷண்முகம் பேசுகையில் கலப்படத்தைக் கண்டுபிடித்து அகற்றவும் விலைவாசியை தமிழகம் முழுவதும் ஒரே சீரான நிலையில் நிலைபெறச் செய்யவும் நகரங்கள்தோறும் பொதுமக்கள் வியாபாரிகள் தொடர்பு குழுக்களை தமிழ்நாடு வர்த்தகக் கழகம் அமைக்க இருக்கிறது என்று குறிப்பிட்டார். பருப்பு, மற்றும் கடலை வகைகள் முதலியவற்றிற்கு தமிழக அரசு கொண்டு வந்துள்ள லைசென்சிங் உத்தரவுபொருட்கள் கட்டுப்பாட்டையும் சிக்கலையும் ஏற்படுத்துவதால் இதை ரத்து செய்யவேண்டும் என்று ஷண்முகம் கூறினார். கூட்டத்தில் கே. மாயாண்டி, வி. எம். டி. திருநாவுக்கரசு மற்றும் பலர் பேசினர். கூட்டத்தல் பின் கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

### ஒருமுனை வரி

தற்போதுபலமுனைவரிவிதிப்பில் உள்ள எல்லா பொருட்களும் ஒருமுனை வரி விதிப்பில் கொண்டுவரப்பட வேண்டும். கூட்டுறவு விற்பனை நிலையங்களுக்கு வழங்குகின்ற சலுகைகள் அனைத்தும் வியாபாரிகளுக்கும் வழங்கி வியாபாரிகளுக்கு கட்டுப்பாடுள்ள பொருள்கள் அத்தியாவசியப் பொருள்களை வழங்கவேண்டும். சட்டமன்றம், மேலவை, நாடாளுமன்றம், ஸ்தல ஸ்தாபனம் ஆகியவற்றில் வியாபாரிகளுக்கு நியமன அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும். பருப்பு, கடலை இவைகளுக்கு விதிக்கப்பட்டுள்ள லைசென்ஸிங் உத்தரவு ரத்து செய்யப்பட வேண்டும். உணவுப் பொருள் கலப்பட தடை சட்டத்தை குற்றவாளிகள் மட்டுமே தண்டிக்கப்படும் வகையில் திருத்தி அமைக்க வேண்டும். மேற்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

என். பலராம நாயுடு நன்றி கூறினார்.

# கலப்பட ஒழிப்பு மாநாடு

சென்னை, டிச. 8—தமிழக வியாபாரிகள் மாநாடு சென்னையில் டிசம்பர் கடைசி வாரத்தில் நடைபெறுகிறது. மாநாட்டில் கலப்படம் ஒழிப்பு, விலைவாசி குறைப்பிற்கான நடவடிக்கைகள் குறித்து மாநாடு ஆலோசிக்கும். இத்தகவலை தமிழ்நாடு வர்த்தகக்கழகத்தின் பொதுச் செயலாளர் பி. ஷண்முகம் ஓர் அறிக்கை மூலம் அறிவித்தார்.

மாநாட்டில்கலந்துகொள்ளுமாறு முதலமைச்சர் மு. கருணாநிதி, மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் க. அன்பழகன், உணவு அமைச்சர் மன்னை நாராயணசாமி ஆகியோர் அழைக்கப்பட்டிருக்கின்றனர். மாநாட்டில் தமிழகம் முழுவதிலுமிருந்துவியாபார சங்கங்களின் பிரதிநிதிகளும் வியாபாரிகளும் கலந்து கொள்ளுகிறார்கள். முக்கியமாக மாநாடு கலப்படத்தை ஒழிப்பது எவ்வாறு என்பதை ஆராய்வதுடன் வணிகர் நல வாரியம் அமைப்பு குறித்து அரசுக்கு அளிக்கப்படும் திட்டங்களும் மாநாட்டில் பரிசீலிக்கப்படும்.

இவ்வாறு பி. ஷண்முகம் அந்த அறிக்கையில் கூறியிருக்கிறார்.

# பல்கலைக் கழகக் கட்டிடத்தில் மாணவர் எழுப்பும் கல்லறை

லண்டன்; டிச. 8—ஐக்கிய நாட்டு சபையின் முன்னாள் பொதுச் செயலாளர் ஊதாண்ட் அண்மையில் மரணம் அடைந்ததும், அவர் உடல் ரங்கூனுக்கு கொண்டு வரப்பட்டதும் தெரிந்ததே.

அவர் உடலை எங்கே புதைப்பது என்பது பெரிய சர்ச்சைக்குள்ளாகியிருக்கிறது.

கடந்த வியாழக்கிழமையன்று ஊதாண்டின் உடல் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டபோது மாணவர்களும் புத்த பிட்சுக்களும் சடலத்தைக் கொண்டுபோய்விட்டார்கள். அதன்பிறகு ரங்கூனில் தியாகிகள் கல்லறைக்கு அருகில் ஊ-தாண்ட சடலத்தை அடக்கம் செய்யலாம் என்று நகர அதிகாரிகள் யோசனை தெரிவித்தனர். அதை மாணவர்களும், புத்த பிட்சுக்களும் நேற்று நிராகரித்து விட்டார்கள்.

இதற்கிடையில் ரங்கூன் பல்கலைக் கழக கட்டிடத்தில் ஊதாண்டிற்காக ஒரு கல்லறையை மாணவர்கள் கட்ட ஆரம்பித்து விட்டார்கள்.

வியாழக்கிழமை சம்பவத்தைத் தொடர்ந்து மக்கள் கிளர்ச்சி செய்யும் நிலவரம் உருவாயிற்று என்றும், வீரர்களுக்கு அளிக்கப்படும் மரியாதையுடன் ஊதாண்ட் அடக்கம் செய்யப்படுவார் என்று அரசு உறுதி கூறியதால் பதட்ட நிலை தணிந்தது என்றும் லண்டன் வட்டாரங்கள் கூறின.

# மணிப்பூரில் புதிய மந்திரி சபை பதவி ஏற்பு

ஷில்லாங், டிச. 8— மணிப்பூர் மாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் தலைமையிலான புதிய கூட்டணி மந்திரி சபை பதவி ஏற்றது.

புதிய முதல்வர் தொரேந்திர சிங்கிற்கும், இன்னொரு மந்திரிக்கும் கவர்னர் எல். பி. சிங் பதவிப்பிரமாணம்செய்து வைத்தார். புதியமந்திரிசபையில் இடம் பெறும் இதர மந்திரிகளின் பெயர்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

# திருவேற்காட்டில் கரூர் வைஸ்யா பாங்கு கிளை

சென்னை, டிச. 8— கரூர் வைஸ்யா பாங்கின் புதிய கிளை ஒன்று திருவேற்காட்டில் திறந்து வைக்கப்பட்டது.

கருமாரியம்மன் ஆலயத்துக்கு அருகே அமைத்துள்ள இந்தப் பாங்கை சுவாமிநாதன் திறந்துவைத்தார். பாங்கின் தலைவர் பி. ஜி. சரண்யன் கலந்து கொண்டார்.

சரண்யன் பேசுகையில் ஆலய வருமானத்தைக் கணக்கிடுவதில் பாங்கு உதவி செய்யும் என்று கூறினார்.

மேலும் விவசாயிகள், வியாபாரிகள் ஆகியோருக்கு உதவி செய்யும் என்றும் கூறினார்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co operative Printing and Publishing Society Ltd.

Chief Editor:
S. V. G. Sowrirajulu.

Honorary Editor :
N. Muthu kumarasami.